

# ஸ்ரீகந்தசுவாமி
# பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட நிதி நிறுவனம் துவக்கம் 1990

பதிவு அலுவலகம் : 60, சாமி பண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 600 002.

கிளை அலுவலகம் : 36, ஜீனிஸ் ரோடு, சைதாப்பேட்டை, சென்னை - 600 015.



## பிக்சட் டெபாசிட்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20%★ |

| ரொக்கப் பத்திரங்கள் | தொகை | பத்திரங்கள் மதிப்பு | தொகை | பத்திரங்கள் மதிப்பு |
|---|---|---|---|---|
| 36 மாதங்கள் | Rs. 2,925/-<br>Rs. 5,850/- | Rs. 5,000/-<br>Rs. 10,000/- | Rs. 8,775/-<br>Rs. 11,700/- | Rs. 15,000/-<br>Rs. 20,000/- |

## காமதேனு மாபெரும் திரும்பப் பெறும் திட்டம்

| டிபாசிட் திட்டம் 15ஆம் ஆண்டுகள் | 5ஆம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 10ஆம் ஆண்டு நீங்கள் பெறும் தொகை | 15ஆம் ஆண்டு பெறும் தொகை |
|---|---|---|---|
| Rs. 6,320<br>Rs. 25,280 | Rs. 6,000<br>Rs. 24,000 | Rs. 6,000<br>Rs. 24,000 | Rs. 56,320<br>Rs. 2,25,280 |

**21%** 5 வருடங்கள் ரூ. 50,000/- அதற்கு மேலும்

## செல்வக்களஞ்சியம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| Rs. 7,500 | 15 Yrs | Rs. 1,25,000 |
| Rs. 9,000 | | Rs. 1,50,000 |

## பொற்குவியல் திட்டம்

| டிபாசிட் | காலம் | வருவாய் |
|---|---|---|
| மாதா மாதம் ரூ. 100/- | 25 Yrs | Rs. 3,00,000 |

## பென்ஷனர் நலத் திட்டம்

**20%**

ரூ.10,000 க்கு மேல்.
காலம் - 1 ஆண்டு

## மறு முதலீட்டுத் திட்டம்

உங்கள் தொகை 45 மாதங்களில் இரட்டிப்பு ஆகும்

| டிபாசிட் | 12 மாதம் | 24 மாதம் | 45 மாதம் | 60 மாதம் |
|---|---|---|---|---|
| Rs. 1,000 | Rs. 1,184 | Rs. 1,430 | Rs. 2,000 | Rs. 2,535 |
| Rs. 7,500 | Rs. 8,880 | Rs. 10,725 | Rs. 15,000 | Rs. 19,010 |

**சேமிப்புத் திட்டம்**
வட்டி 10%
காசோலை பெறும் வசதி உண்டு

## ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

| டிபாசிட் ரூ.50ன் பெருக்கம் | மாதங்கள் முடிவில் கிடைக்கும் தொகை | | | |
|---|---|---|---|---|
| | 12 மாதம் | 24 மாதம் | 36 மாதம் | 48 மாதம் |
| Rs. 50 | Rs. 660 | Rs. 1,430 | Rs. 2,360 | Rs. 3,600 |
| Rs. 100 | Rs. 1,320 | Rs. 2,860 | Rs. 4,720 | Rs. 7,200 |

**தங்க நகை கடன்**
Rs. 3,000 PER 10 GRAM
கடனுக்கு உச்ச வரம்பு இல்லை
வீடுகளின் பேரில் கடன் வழங்கப்படும்

மாத வைப்புக்கான செக்குகள் முன்கூட்டியே வழங்கப்படும்.
தனலோகம் டிபாசிட் திட்டம் 20% குறைந்த அளவு ரூ. 20,000
★ டிபாசிட் காலம் 5 ஆண்டுகள்

சேர்மன் P. பாலசுப்பிரமணியம், B.Sc.,
சீனியர் டிரஸ்டி, ஸ்ரீகந்தகோட்டம்,
சென்னை - 3.



பங்குதாரர்களுக்கு மட்டும்
H.O. : Friday Holiday
B.O. : Tuesday Holiday

சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி

**பாதுகாப்பு பெட்டகம் குறைந்த வாடகைக்கு கிடைக்கும்**

SURESH

அடுத்த இதழில்....

# உறங்காத இரவு...!



பட்டுக்கோட்டை பிரபாகர் எழுதும்

நாலு வார 'நறுக்' தொடர் ஆரம்பம்!

# பிரியமான சீதா!

அண்ணாமலை, பாண்டியன், வீரா இப்போது ஆரம்பித்திருக்கும் பாட்ஷா வரை – ரஜினியின் சமீபத்திய படங்கள் எல்லாமே இந்திப் படங்களின் ரீமேக் தான்.

ஆகவே, அடுத்து வரப் போகிற 'வாத்தியாரய்யா' படத் தயாரிப்பாளருக்கு ரஜினி ஒரு முக்கியக் கட்டளையிட்டிருக்கிறார். "நோ ரீமேக் பிஸினஸ்!"

அக்னிபாத், ஹம், குதாகவா ஆகியவற்றைக் கலக்கிக் குலுக்கி 'பாட்ஷா' கதை பண்ணியதைப் போல சில இந்திப் படங்களை 'குன்சா'கக் கலந்து 'வாத்தியாரய்யா'வை உருவாக்கி விடலாம் என்று எண்ணியிருந்தவர்களுக்கு வெகு அதிர்ச்சி.

ஆனால், எஸ்.பி.முத்துராமன் இதை ஒரு சவாலாக எடுத்துக் கொண்டு, அருமையான கதை ஒன்றை உருவாக்கும் முயற்சியில் ஈடுபட்டிருப்பதாகச் சமீபத்திய செய்தி. வெற்றி பெற வாழ்த்துக்கள்.

முழு முழு நீள நகைச்சுவைப் படம் ஒன்று - நிஜமாகவே – முற்றிலும் மாறு பட்டதாகத் தமிழில் வரப் போகிறது.

மலையாளத்தில் ஜெயராம் நடித்து சக்கை போடு போட்ட ஒரு கதையின் 'நாட்'டை மட்டும் எடுத்

• பாண்டியராஜன் : பிரமாத பிரேக்



• ரஜினி : நோ ரீமேக்



• சீதா : பிரியமானவள்

துக் கொண்டு 'வள்ளி வரப் போறா' வை எடுத்துக் கொண் டிருப்பதாகச் சொன்னார் டைரக்டர் சோலைராஜா. இவர் நமக்கெல்லாம் ஏற்கெனவே அறிமுக மானவர்தான் - மெட்ரோ சேனல் 'சினிமா நேரம்' மூலம்.

"இந்தப் படத்தில் ஒரு தமிழ் இளைஞன், திருட்டுத் தனமாக கேரளப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டபின் சந்திக்கும் சிக்கல்கள் பற்றிச் சொல்லியிருக்கி றேன்!" என்றார் ராஜா.

பாண்டியராஜனின் சமீபத்திய (வெகுநாளைய?) சரிவுக்குப் பின் இந்தப் படம் ஒரு பிரமாதமான 'பிரேக்'காக இருக்கும் என்று கோடம்பாக்கத்தில் குரல் கேட்கிறது.

படம் பற்றி ஒரு கொசுறு :

'மெட்ரோ' ப்ரியா ஒரு ஸீனில் தலைகாட்டுகிறார்.

**பா**ர்த்திபனின் 'சரிகமபதநி'- ஒருவாறாக 'பிக்கப்' ஆகிவிட, மனுஷர் இப்போது செமை சந்தோஷத்தில்! அடுத்து அவர் இயக்கவிருக்கும் 'பிரியமானவளே...' யில் பிரியமானவளாக நடிக்கப் போகிறவர் திருமதி பார்த்திபனே தானாம்!

"சமீபத்தில் மொட்டையடித்ததால் சீதாவுக்கு இன்னும் முடி முழுதும் வளரவில்லை. வளர்ந்ததும் ஆரம் பித்து விடுவேன்" என்று உற்சாக மாகச் சொல்கிறார் பார்த்திபன்.

'திருமணத்துக்குப்பின் நடிக்க மாட்டேன்' என்று சீதாவும் ஏதும் ஸ்டேட்மென்ட் விட்டிருக்கிறாரா? யாராவது பழைய தினத்தந்தி கட்டிங் அனுப்பினால் ஒரு மூட்டை தேங்ஸ்.

**மோ**கமுள். ரிலீஸாவதற்கு முன்பே பரவலாகப் பேசப்படுகின் றது. தி.ஜானகிராமனின் கதை. மராத்திப்பெண், கேரள டைரக்டர் என்றெல்லாம் ஆங்காங்கே படித் திருப்பீர்கள். பாடல்களைக் கேட்டீர் களா? இளையராஜா மறு அவதாரம்



• இளையராஜா : மறு அவதாரம்

எடுத்திருக்கிறார். அநாவசிய மேற் கத்தியக் கலப்பெல்லாம் இல்லாமல் தூய, ரிஃபைண்ட் கர்நாடக இசை யருவி பொழிந்திருக்கிறார். சிந்து பைரவிக்குப் பிறகு ராஜாவின் பெயரை அகில இந்திய அளவில் அவார்டு கமிட்டியினர் மத்தியில் பேச வைக்கப் போகிற பாடல்கள்.

— ஹர்ஷ ராஜ்

• பெயர் மாற்றம் செய்யுங்கள் 'வேலை வாய்ப்பில்லா அலுவலகம்' என்று!

— கோ. பாலமுருகன்



# சந்தை




ஒன்றரை பக்க நாளேடு
சோ/அல்லயன்ஸ் வெளியீடு, 244, ஆர்.கே. மடம் சாலை, சென்னை - 4./விலை ரூ. 20/-
துக்ளக்கில் வெளிவந்த நகைச்சுவைப் பக்கங்களின் தொகுப்பு. கூடவே, சோவின் சீரியஸான சில கட்டுரைகள். (அந்தக் காலத்தில் எம்.ஜி.ஆரை செமை வாரு வாரியிருக்கிறார் சார்!)




நிர்வாணம் /சிறுகதைகள்/உடுவை.
தில்லை நடராசா/NCBH வெளியீடு, 41, சிட்கோ இன்டஸ்ட்ரியல் எஸ்டேட், சென்னை - 98/விலை ரூ. 20/-
இலங்கை எழுத்தாளரின் சிறுகதைத் தொகுதி. கதைகளை விட நடைமிக சுவாரஸ். பதப் பிரயோகங்கள் நம்மவர்களுக்கு வினோதமாயிருக்கலாம். (உதா: ''ஐயா, இந்தக் கோவில்களிலே வெடியன், வாணங்கள், சின்ன மேளம், பெரிய மேளம், சிகரம், சப்பறம் எண்டு சிலவழிக்கிற காசெல்லாத்தையும் வறுமைப் பட்டதுகளுக்குக் குடுத்தால் அதுகள் வயிறு நிறையச் சாப்பிடுங்கள்!'')




காவல் துறைச் சட்டங்கள்/
மணிமேகலைப் பிரசுரம், 4, தணிகாசலம் சாலை, சென்னை - 17/
விலை ரூ. 15.50
எந்தெந்த சமயங்களில் காவலர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும், வாரண்ட், வழக்கு, விசாரணை, இ.பி.கோ என்று முழுதும் போலீஸ்துறை சம்பந்தப்பட்ட விஷயங்கள். கிரைம் கதை எழுத விரும்பும் ஆரம்ப எழுத்தாளர்களுக்கு வெகு உபயோகம்.




அவனுக்கு மேலே ஒரு வானம்/
பொன்மணி வைரமுத்து/சூர்யா வெளியீடு, 15, 4-வது கிராஸ், ட்ரஸ்ட்புரம், சென்னை - 24./
விலை ரூ. 40.
வாரப் பத்திரிகை ஒன்றில் தொடராக வந்த ஆசிரியரின் முதல் நாவல். தன்னம்பிக்கையால் உயர்ந்த ஒரு ஏழைச் சிறுமி பற்றிய கதை. ஒரு மூச்சில் படிக்க முடிகிறது.

# உத்தரப்பிரதேசத்தில் யுத்த காண்டம்!

கன்ஷிராமும், மாயாவதியும் கொடுக்கிற தலைவலி போதாது என்று, உ.பி. முதல்வர் முலாயம் சிங் யாதவை இப்போது உலுக்கிக் கொண்டிருக்கும் பிரச்னை, தனி உத்தர காண்ட் மாநிலக் கிளர்ச்சி.

கட்வால், குமாவ் மலைப் பகுதிகளில் உள்ள எட்டு மாவட்டங்களை, தனி உத்தர காண்ட் மாநிலமாக உ.பி.யிலிருந்து பிரித்துக் கொடுக்கும் தீர்மானத்தை, முலாயம்சிங் யாதவ் சட்டசபையில் நிறைவேற்றி, நாடாளுமன்ற ஒப்புதலுக்காக மத்திய அரசுக்கும் அனுப்பி வைத்து விட்டார். ஆனால், மத்திய அரசு இதற்கு ஒப்புக் கொள்ளுமா என்பது கேள்விக்குரியது. பா.ஜ.க. ஆட்சி செய்த போதே, இது போல ஒரு சட்டமன்றத் தீர்மானத்தை அது மத்திய அரசுக்கு அனுப்பி வைத்த போது, அதைக் கண்டுகொள்ளாமல் கிடப்பில் போட்டு விட்டது மத்திய அரசு.

பல வருடங்களாக அழுத்தி வைக்கப்பட்ட மக்களின் உணர்ச்சிக் கொந்தளிப்புத்தான் இந்தப் போராட்டம். இந்த மலைப் பகுதிகளின் வளர்ச்சிக்கான பட்ஜெட்டில், பாதிக்கு மேல் உ.பி.யின் பிற பகுதிகளுக்கும், மீதி அரசியல்வாதிகளின் பாக்கெட்டுக்கும் தான் போய்க் கொண்டிருக்கிறது. வருடா வருடம், திட்ட இனச் செலவுகளுக்கு அப்பாற்பட்டுக் கொடுக்கப்பட்டு வரும் சுமார் ஆயிரம் கோடி ரூபாய் எங்கேதான் போகிறது என்பது இவர்கள் கேள்வி. சீன எல்லைக்குப் போகும் பாதையைச் சீராக்கியது தவிர, கிராமங்களில் குடிநீர், மின்சாரம் என்று எந்த ஒரு முன்னேற்றமும் கிடையாது.

'குமாவ், கட்வால் பகுதிகளைச் சேர்ந்த எட்டு மாவட்டங்களும், பின்தங்கியவை என்று 1975லேயே உச்சநீதிமன்றம் தீர்ப்பு அளித்திருக்கிறது. மண்டல் கமிஷன் அறிக்கையில் கூட இது ஒரு முக்கிய அம்சமாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. எனவே, பிரிவினை உணர்ச்சியைத் தூண்டி, தனி மாநிலமாகப் பிரித்துக் கொடுப்பதை விட, இந்தப் பின்தங்கிய பகுதிகளை அபிவிருத்தி செய்வதுதான் உடனடி கவனத்தைப் பெற வேண்டும். மலைப் பகுதி மேம்பாட்டு கவுன்சில் என்று அமைத்து, நிறையவே சுயாட்சி உரிமையும் கொடுத்தால் போதும்' என்கிறது மார்க்ஸீய கம்யூனிஸ்ட் கட்சி.

ஆனால், தனிமாநிலம் பெற்றால் தவிர விமோசனமே கிடையாது என்று தீவிரமாகப் போராடி வருகிறார், உத்தரகாண்ட் கிராந்தி தளத் தலைவர் இந்திரமணி பதோனி. இவர் முன்னாள் எம்.எல்.ஏ.



• முலயம்சிங் யாதவ்

பின்தங்கியவர்கள் இரண்டு சதவிகிதமே இருக்கையில், 27 சதவிகித ஒதுக்கீடு அபத்தமானது என்பது போராட்டத்தில் இறங்கியிருக்கும் மாணவர்களின் கருத்து.

"இட ஒதுக்கீட்டை நாங்கள் எதிர்க்கவில்லை. பின்தங்கிய மக்களுக்காக ஐந்து சதவீதம் வேண்டுமானால் மலைப் பகுதிகளில் ஒதுக்கட்டும். 27 சதவீதத்தை எங்களால் ஏற்க முடியாது. ஏனென்றால், அதில் முதலமைச்சரின் சாதிக்காரர்கள் அதிக இடத்தைப் பிடித்துக் கொண்டு, மலைப் பகுதிகளில் உள்ள கல்வி நிலையங்களை எல்லாம் ஆக்ரமித்துக் கொண்டு விடுவார்கள்!"

கே.சி. பந்த் முதலிய காங்கிரஸ் தலைவர்கள் இந்த மக்களிடம் பேச முயன்று, மூக்கு உடைபட்டுத் திரும்பிப் போயிருக்கிறார்கள்.

"எப்படியாவது போராட்டத்தைச் சமாளியுங்கள்!" என்று யாதவுக்கு உத்தரவு போட்டு விட்டு, வியத்நாம் பயணம் போய் விட்டார் பிரதமர்.

பிரதமரிடம் பேசும் போது, முலாயம் சிங் யாதவ், தாம் கொடுக்க முன்வந்த சலுகைகளைப் பட்டியலிட்டிருக்கிறார். சர்வகட்சிக் கூட்டம் ஒன்றைக் கூட்டியும் இருக்கிறார்.

'தேசப் படத்தில் இன்னொரு மாநிலமா?' என்று அட்லாஸ் தயாரிப்பாளர்கள் பெருமூச்சு விடு கிறார்கள்!

— சாருகேசி

வாழப்பாடி ராமமூர்த்தி

ஐயோ! சகிக்கலை! காது ஜவ்வே கிழிஞ்சுடும் போலிருக்கே!

முரசொலி

தாங்கபாலு

470 கோடி

சிங்கப்பூர் தாழ்வாரம் திட்டம்

800 ஏக்கர் நிலப்பட்டா

அம்மா சிங்கப்பூர் பயணத்துக்கு மூட்டை கட்டிட்டு இருக்காங்க! ஏதாவது ஒண்ணுல நமக்கு இடம் கிடைக்காமலா போகும்?

நம்பாதீங்க! புலிகளோட ரகசிய ஒப்பந்தம் பண்ணிட்டிருக்காங்க

புலிகளாவது மண்ணாவது! எல்லோரையும் பிடிச்சாச்சு!

ஜெ.

வை.கோ.

என் மேலே வீண்பழி சுமத்துறாங்க; எனக்கும் புலிக்கும் சம்பந்தமே இல்லை!






# கல்கி

1994
செப்டம்பர் 18
பவ
புரட்டாசி 2
மலர் : 53
இதழ் : 7


# ஒரு புலியின் மரணம்; ஓராயிரம் புலிகள், கவனம்!

சக்தி, விஜயன், விஜி, முருகன் - பெயர் என்னவாக இருந்தால் என்ன? விடுதலைப் புலி! எப்படி இறந்தான்? குண்டு வெடித்தது திட்டமிட்டா? எதேச்சையாகவா? - இவை முக்கியமல்ல. அவன் வாழ எண்ணவில்லை; போலீஸாரிடம் சிக்கி கேள்விக் கணைகளுக்கும் சித்திரவதைகளுக்கும் உள்ளாக விரும்பவில்லை என்பதே கவனத்துக்குரியது. போலீஸார் துப்பு துலக்கி அவனைத் தேடி வரவில்லை. வேறு ஏதோ கேஸ் விஷயமாக அவனிருந்த இடத்துக்கு வர, இவன் பதற்றமடைந்து உயிர்ப்பலியானான். இது போலீஸாரின் ஆற்றலுக்குச் சான்று பகரவில்லை. ஏ.கே. - 47ஐ விடவும் சக்திவாய்ந்த ஆயுதமான தடாவை வைத்துக் கொண்டிருந்தும் நமது போலீஸாரால் விடுதலைப் புலிகளை ஒழிக்க முடியவில்லை என்பது காவல் துறைக்குத் தலைகுனிவே.

'தமிழ்நாட்டில் விடுதலைப் புலிகள் நடமாட்டமே இல்லை' என்று முதல்வரும், அமைச்சர்களும், அதிகாரிகளும் அறிக்கைகள் விடுவதும் பிறகு விஜயன் மாதிரி புலிகள் திடீரென்று முளைப்பதும் மரிப்பதும் வாடிக்கையாகி விட்டன. உடனே எஸ்.ஆர்.பி. அல்லது வாழப்பாடி, 'புலிகளுக்கும் முதல்வருக்கும் இடையே ரகசிய ஒப்பந்தம் இருக்கிறது' என்றும் 'புலிகள் நடமாட்டம் அதிகரித்து விட்டது' என்றும் குதிப்பது வழக்கமாகி விட்டது. வை.கோ.வும் அவர் கட்சியும் இதில் இழுக்கப்படுவதும் அவர் மறுப்பு தெரிவிப்பதும் மற்றொரு மாமூல் சமாசாரம்.

இவற்றில் யாருடைய கூற்று உண்மையோ இல்லையோ, 'தமிழ்நாட்டில் புலிகள் நடமாட்டமே இல்லை' என்ற முதல்வரின் ஆணித்தரமான மறுப்பை மட்டும் நிச்சயமாக ஏற்க முடியாது. அவ்வப்போது தப்பி விடுகிற புலிகளும், தப்புவிக்கிற புலிகளும், தற்கொலை செய்து கொள்ளும் புலிகளும் அவரது வாக்கைப் பொய்யாக்குகிறார்கள். இதனால், 'முதல்வருக்கும் புலிகளுக்கும் இடையே ரகசிய ஒப்பந்தம்' என்ற குற்றச் சாட்டை நம்மால் ஏற்றுக் கொண்டு விட முடியாது. அத்தகைய ஒரு தேசத் துரோகத்தை முதல்வர் செய்வார் - உயிருக்குப் பயந்து - என்று நம்மால் நம்ப முடியவில்லை.

உண்மை நிலை என்னவெனில், தமிழகத்தில் கால் ஊன்றிக் கொள்ளாமல் புலிகளால் ஈழத்தில் யுத்தம் செய்ய முடியாது. அவர்களுக்குப் பதுங்கவும், ஆயுதங்களைப் பதுக்கவும், பணம் திரட்டவும், அதற்காகக் கள்ளக் கடத்தல் நடத்தவும் தமிழகத்தின் கடற்கரையோரப் பகுதிகள் இன்றியமையாதவை. இன்னும் சொல்லப் போனால் இங்கு நடக்கும் பல பகல் கொள்ளைகள், வழிப்பறிகளில் கூட அவர்களுடைய மறைமுகத் தூண்டுதலும் அவர்களுக்கு ரகசிய ஆதாயமும் இருக்கலாம் என்று சந்தேகிக்கவே தோன்றுகிறது.

சுதந்திரத் தமிழ் ஈழத்துக்காகப் போராடுகிற புலிகளிடம் தமிழக மக்களுக்கு நிறையவே அனுதாபமிருந்தது என்பதை மறுக்க இயலாது. ஆனால் ராஜீவ் மரணத்துக்குப் பிறகு அதற்குக் காரணமான புலிகள் மீது வெறுப்பே மேலோங்கியது. பல்வேறு கட்சித் தலைவர்களும் மக்களின் அதிருப்திக்கு ஆளாக விரும்பாமல், புலிகளிடம் பாசம் காட்டாமல் ஒதுங்குகிறார்கள். ஆனால் இவ்வாறு கண்டுகொள்ளாமல் இருந்தால் மட்டும் போதாது. புலிகளுக்கு இங்கே புகலிடம் தருவது என்பது ராஜீவின் நினைவுக்குத் துரோகம் என்பது மட்டுமல்ல; கொள்ளிக்கட்டையை எடுத்து நம் தலையை நாமே சொறிந்து கொள்வதற்கு ஒப்பாகும் என்பது உணரப்பட வேண்டும்.

'புகலிடம் இல்லை' என்று சொன்னால் ஆகி விட்டதா? அமுல்படுத்திக் காட்ட வேண்டும் அல்லவா? ஆயிரம் கி.மீ. நீளமுள்ள கடற்கரையை மாநில அரசால் மட்டும் கண்காணிக்கவே முடியாது. மத்திய அரசும் பாதுகாப்பு அமைச்சகமும் ஒத்துழைத்தால் அன்றி நடக்காது. இதற்கு மத்திய - மாநில உறவுகள் சுமுகமாக வேண்டும். இல்லாவிட்டால், 'உன் தலைவலி; நீயே அனுபவி' என்ற போக்கில் மத்திய அரசு நடந்து கொள்ளும். நமது முதல்வரோ எப்போது கொதிப்பார், எப்போது ஆறுவார் என்று புரியாத புதிராகவே மத்திய அரசுக்குத் தென்படுகிறார். சட்டசபையில் அபரிமித மெஜாரிடி பலம் உடைய அவர் அச்சமின்றி இன்னும் பெருந்தன்மையுடன் மத்திய அரசிடம் நடந்து கொண்டு, அதன் மதிப்பில் உயரலாம்.

டில்லியின் உதவி பெற்று இங்கு புலிகளைக் கட்டுப்படுத்துவது என்பது, சந்திரிகாவின் சமாதான முயற்சிகளால் தேவையற்றதாகவில்லை; முன்னிலும் அத்யாவசியமாகிறது.

தமிழ்த்திரு நாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா - பாரதியார்.



"டைரக்டர் எதுக்கு காவல் நிலையத்தைப் படம்பிடிக்கச் சொல்கிறார்?"

"கதாநாயகி கற்பழிக்கப்படுவதை சிம்பாலிக்கா காட்டப் போறாராம்!"

- இப்படி ஒரு ஜோக் சில நாட்களுக்கு முன்பு படித்த ஞாபகம். சரிந்து கொண்டு வரும் காவல் துறையின் இமேஜை, தோலுரித்துக் காட்டும் ஜோக்.

நிஜ வாழ்விலோ சிதம்பரம், பத்மினி கேஸ்; முத்தாண்டிக்குப்பம் வசந்தா, வீரப்பனைத் தேடப் போன காவலர்களின் கைவரிசை என்று கற்பழிப்பு சம்பவங்கள். போதாக் குறைக்கு சில மாதங்களுக்கு முன் வழிப்பறியில் ஈடுபட்ட இரு ஆயுதப் போலீஸார் வட சென்னையில் கைது செய்யப்பட்டுள்ளனர்! மயிலாப்பூர் சிறுவன் சதீஷ்குமாரின் சரித்திரமோ கண்ணில் நீரை வரவழைக்கும். இப்படிச் சொல்லிக் கொண்டே போகலாம்.



கற்பழிப்பு வழக்கில் கைதான போலீசாருக்கு காவல் நீடிப்பு

கோர்ட்டு முன்பு பெண்கள் மறியல்

போலீஸ்காரர் தற்கொலை

போலீஸ்காரர்கள் "சஸ்பெண்டு"

மயிலாப்பூர் காவல் நிலையத்தில் சிறுவன் சாவு!

சப் - இன்ஸ்பெக்டர் ஜாமீன் மனு தள்ளுபடி!

ஐகோர்ட்டு உத்தரவு!!



"இன்று நிலைமை புரையோடி விட்டது. அடிப்படையிலேயே கோளாறு இருக்கிறது. உள்நோக்கத்துடனும் லாப நோக்கத்துடனும் நிகழும் அரசியல்வாதிகள் போலீஸாரின் கூட்டு, என்று நிறுத்தப்படுகிறதோ அன்றுதான் காவல் துறை தனது இழந்த நல்ல பெயரை மீட்கத் தொடங்கும்" என்கிறார் ஓய்வு பெற்ற காவல் துறைத் தலைவர் வி. ஆர். லக்ஷ்மிநாராயணன்.

"பணிக்கு ஆட்களைத் தேர்ந்தெடுக்கும் முறையிலேயே தவறு இருக்கிறது. ஆயிரம் எஸ்.ஐ.கள், ஐயாயிரம் கான்ஸ்டபிள்கள் என்று ஒரே சமயத்தில் தேர்ந்தெடுக்கிறார்கள். ஏதோ சாதனை செய்வது போன்ற தோற்றத்தை உருவாக்குகிறார்கள். இந்த நிலையில், அரசியல்வாதிகளின் நச்சரிப்பின் காரணமாக, தகுதியில்லாதவர்கள் கூட தேர்ந்தெடுக்கப்பட்டு விடுகிறார்கள். முன்பெல்லாம், மாதம் ஒருமுறை காலியிடங்களுக்கு ஏற்ப 'இண்டர்வ்யூ' நடத்தி அதிகாரிகள் மட்டத்திலேயே ஆட்களைத் தேர்ந்தெடுப்

போம். தகுதியுள்ளவர்கள் மட்டுமே வருவார்கள்.

"ஆயிரக்கணக்கில் ஆட்களைத் தேர்ந்தெடுப்பதில் இன்னொரு ஆபத்தும் இருக்கிறது. உதாரணமாக, 1985ல் 1000 சப்-இன்ஸ்பெக்டர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள் என்று வைத்துக் கொள்ளுங்கள். குறைந்தபட்சம் பத்து வருடம் கழித்தாவது அவர்களுக்குப் பிரமோஷன் கொடுக்கப்பட வேண்டும். இன்று மேல் பதவியில் காலியிடங்கள் அதிகம் இல்லாததால், பிரமோஷன் கிடைக்காமல் ஏராளமானோர் வெறுத்து சலித்துப் போய் இருக்கிறார்கள். இது வேலைத் திறனைப் பாதிக்குமா பாதிக்காதா?" என்று கேட்கிறார் இவர்.

"இந்த நிலை இருப்பது உண்மைதான்" என்கிறார் சென்னையின் பிஸியான காவல் நிலையங்கள் ஒன்றில் பணிபுரியும் ஒரு சப்இன்ஸ்பெக்டர். "என்னோட செட், என் நண்பர், மத்திய புலனாய்வுத் துறையில் சேர்ந்தார். ஏழு வருடத்தில் ஒரு பிரமோஷன் கிடைத்து விட்டது. இங்கு நாங்கள் அல்லாடிக் கொண்டிருக்கிறோம்."

"ஆட்களைக் காவல் பணிக்குத் தேர்ந்தெடுத்தவுடன், பயிற்சிக்கு அனுப்புகிறார்கள். இது மிகவும் முக்கியமான கட்டம். ஆனால் இங்கே என்ன நிலை? அரசியல்வாதிகளுடன் சமரசம் செய்து கொள்ளத் தெரியாத, நேர்மையான அதிகாரிகள் ஒரு தண்டனை போல் இந்தப் பள்ளிகளில் பிரின்ஸிபாலாகப் போடப்படுகிறார்கள்; அல்லது பேர், ரிப்பேரான அதிகாரிகள், இங்கே தள்ளப்படுகிறார்கள். இப்படியிருக்க, அந்த முதல்வர் எப்படி உற்சாகத்தோடு வேலை செய்வார்?" என்று கேட்கிறார் லட்சுமி நாராயணன்.

மைலாப்பூர் காவல் நிலையத்தில் சிறுவன் சாவு
சப் - இன்ஸ்பெக்டர் ஜாமீன் மனு தள்ளுபடி!
ஐகோர்ட்டு உத்தரவு!!
இறந்தவர் குடும்பத்துக்கு ரூ.2½ லட்சம் நஷ்டஈடு
ஐகோர்ட்டு உத்தரவு
டெல்லி சிறையில் இருந்து கைதி தப்பி ஓட்டம்
தமிழக போலீசார் 8 பேர் கைது
போலீஸ் சூப்பிரண்டு வேலை நீக்கம்!

# காவல் துறை: பேரு ரிப்பேராச்சு!



• வி. ஆர். லக்ஷ்மி நாராயணன்

குமரி மாவட்டத்தில் உள்ள ஒரு பெரிய போலீஸ் அதிகாரியோடு பேசிக் கொண்டிருந்த போது ஒரு புதிய விஷயம் வெளிப் பட்டது. "பல்வேறு மாவட்டங்களில் தவறு செய்பவர்களை இந்த மாவட்டத்துக்கு மாற்றி விடுகிறார்கள். ஆனால் அவர்கள் வந்து பணியில் சேர்வதில்லை. அப்படியே சேர்ந்தாலும், உடனே விடுமுறையில் சென்று விடுகிறார்கள். மேலும் இளைஞர்களை இங்கே போட்டாலும் வர மாட்டேன் என்று சொல்லி விடுகிறார்கள். அதனால் இங்குள்ள போலீஸ்காரர்கள் பெரும்பாலும் 45 வயதுக்கு மேற்பட்டவர்களே. பல வருடங்களாக இங்கே இருப்பதால், சமயங்களில் வேண்டியவர், வேண்டாதவர் பாகுபாடு காட்டப்படுகிறது. இதனால் புதிய பிரச்னைகள் உருவாகின்றன" என்று சொன்னார் அவர்.

சமீப காலங்களாக மிக மோசமான போக்கு, அரசாங்கத்தால் கையாளப் படுகிறது. மேல்நிலையில் போலீஸ் பதவிகளை நிறைய உருவாக்கி, காவல் பணியில் இடங்கள் காலியில்லாததால் மின்சார வாரியம், பல்லவன் கார்ப்பரேஷன், டூரிஸம் துறை என்று இங்கெல்லாம் சேர்மன்களாகவும், விஜிலன்ஸ் ஆபீஸர்களாகவும் அனுப்பப்பட்டு வருகிறார்கள். இதில் வேதனையான விஷயம் என்னவென்றால், ஜூனியர் அதிகாரி போலீஸ் துறையில் தலைமைப் பொறுப்பில் இருக்க, சீனியரான ஒரு அதிகாரி, பல்லவன் அலுவலகத்தில் கதைப் புத்தகங்களைப் படித்து, நாற்காலி தேய்த்துக் கொண்டிருப்பார்! காவல் பணியில் இருக்கும் ஜூனியர் அதிகாரியோ, தன் பதவியைத் தக்கவைத்துக் கொள்ள அரசியல்வாதிகளைத் திருப்திப்படுத்தும் நோக்கிலேயே செயல்படுகிறார்.

இது பற்றிக் கேட்ட போது லக்ஷ்மி நாராயணன் சொன்னார் : "நீங்கள் கூறுவதும் சரிதான். ஆனால் கீழ்நிலையில் உள்ள போலீஸ்காரர்களின் பிரச்னையையும் நாம் பார்க்க வேண்டும். பயங்கரவாதம் வளர்ந்து விட்ட சூழ்நிலையில், இன்றைய போலீஸ்காரர்கள் அதைச் சந்திக்கும் நோக்கில் நன்கு பயிற்சி அளித்து தயாரிக்கப்படவில்லை. தவிர, பாதுகாப்பு என்ற பெயரில் போலீஸ்காரர்களின் நேரம் வீணாக்கப்படுகிறது. ஒரு முதலமைச்சர் காலை பதினோரு மணிக்கு ஒரு துவக்க விழாவுக்குச் செல்வதாக இருந்தால், போலீஸ்காரர்கள் காலை ஆறு மணிக்கே கட்-அவுட்கள் அருகே காவலிருக்க வேண்டியதாகி விடுகிறது. சாப்பாடும், தண்ணியும் இல்லாமல் பிற்பகல் நாலு மணி வரை டியூடி பார்த்து, பிறகு ஸ்டேஷனுக்கு வருவார் இன்ஸ்பெக்டர். நகைகளைப் பறி கொடுத்தவர்கள், சைக்கிளைத் தொலைத்து விட்டவர்கள் காத்துக் கொண்டிருப்பார்கள். "ஸார் நம்ப கேஸ் என்ன ஆச்சு?" என்று அவர்கள் கேட்கும் போது இவருக்கு எரிச்சல்தான் வரும்! இந்தச் சமயம் பார்த்து, "ஸார், ராமசாமி தெரு கொள்ளையில் சம்பந்தம் உள்ள ஆசாமி ஒருவன் சிக்கியிருக்கிறான். லாக்-அப்பில் வைத்திருக்கிறோம்" என்று சொல்வார், ஹெட்கான்ஸ்டபிள். ஏற்கெனவே கடுப்பில் இருக்கும் இன்ஸ்பெக்டர் பெல்டை கழற்றியபடிவேதான் லாக் அப்புக்குள் போவார். இரண்டு கேள்விக்கு மேல் பிறக்காது. பெல்ட்டும், லட்டியும்தான் விளையாடும்! ஆக, போலீஸார் சரியாக நடந்து கொள்ளவில்லை என்று குற்றம் சாட்டினால் போதாது; ஏன் அப்படி இருக்கிறார்கள் என்று ஆராய்ந்து நிலைமையைச் சீர்ப்படுத்த வேண்டியது



சமையல் மோசமானால் ஒரு நாள் நஷ்டம். அறுவடை மோசமானால் ஓராண்டு நஷ்டம். விவாகம் மோசமானால் வாழ்நாள் முழுவதும் நஷ்டம்.
— ஸ்வீடன் பழமொழி
தகவல் : வயலூர் ஆர். பார்த்திபன்

**மேல் நாட்டில் போய்ப் படிக்க வேண்டுமானால் மூன்று விஷயங்கள் தேவை**




# அட்மிஷன்... ஒரு விசா... மற்றும்...

# ...மார்கதர்சி!

உங்களுக்கு ஒரு கனவு இருந்தது. உங்களால் மேல் நாட்டுக்குப் போய் படிக்க முடியாது போனாலும் உங்கள் மகன் அதைச் செய்யவேண்டும். அதை நீங்கள் அவனுக்கு சாத்தியமாக்க வேண்டும் - அவனுக்குத் தேவையான எல்லா ஆதரவும் கொடுத்து, பக்கத்திலிருந்து கூடவே படித்து...

இது எல்லாவற்றையும் நீங்கள் செய்தீர்கள். இப்போது அவன் இஞ்சினியர் ஆகவுள்ள தருவாயில் உங்கள் கனவை நனவாக்க வேண்டிய காலம் வந்து விட்டது. ஆனால் அதற்கு ஆகப் போகும் செலவைப் பற்றி நீங்கள் கவலைப் படுகிறீர்களா?

உங்கள் கவலைகளைப் போக்க மார்கதர்சி ஒரு வழி காட்ட முடியும் - சிட் ஃபண்டுகள் மூலமாக. உங்களுக்குத் தேவையான பெருந்தொகைகளைச் சுலபமாக அடையும் வழி. கடந்த முப்பத்திரண்டு ஆண்டுகளாக ஆந்திராவில் லட்சக்கணக்கானோர் மார்கதர்சியின் உதவி பெற்றுப் பயனடைந்துள்ளனர். இப்போது உங்கள் முறை!

உங்கள் செலவுகளுக்கேற்ப திட்டமிட்டுக் கொள்ள மார்கதர்சி சிட் ஃபண்ட்ஸ் உங்களுக்கு உதவுகிறது. ஒவ்வொரு மாதமும் ஒரு குறிப்பிட்ட தொகையைச் செலுத்தி வரலாம். உங்களுக்குத் தேவை ஏற்படும்போது, செலுத்திய தொகையைக் காட்டிலும் மிக அதிகமான தொகையைக் கேட்டுப் பெறலாம். 'ஏன், எதற்கு' என்று யாருக்கும் நீங்கள் விளக்கமளிக்க அவசியம் இருக்காது. நீங்கள் பெறக் கூடிய தொகையின் அளவை மற்றவர்கள் தீர்மானிக்கப் போவதுமில்லை. நீங்கள் சேரும் சிட் ஃபண்ட் திட்டத்தைப் பொறுத்து, பெறக் கூடிய தொகையின் அளவையும் அதைத் திரும்பச் செலுத்தும் தவணைகள் குறித்தும் நீங்களே முடிவெடுக்கலாம்.



மார்கதர்சி பற்றியும் அதன் சிட் ஃபண்ட் திட்டங்கள் பற்றியும் இன்னும் அதிகமாகத் தெரிந்து கொள்ள இன்றே எங்களை அணுகுங்கள்.

## மார்கதர்சி சிட் ஃபண்ட் (மெட்ராஸ்) லிமிடெட்,

**ஏ 1 & 2, பார்சன் மானர் காம்ப்ளெக்ஸ்,**
**அண்ணா சாலை, சென்னை – 600 006,**
**தொலைபேசி : 8266002**

**வாழ்க்கையைப் போல் உங்கள் தேவைகளும் நிஜமானவை!**

ஆந்திராவில் 27 கிளைகளைக் கொண்ட கம்பெனியின் மதராஸ் துணை நிறுவனம்.



'டெல்லி டிரீம்ஸ்' ஒரு போட்டி ஏற்பாடு செய்திருந்தது. போட்டியில் டெல்லியைச் சேர்ந்த வாகனங்கள் வியாபாரி ஆர்.கே. உப்பல், ஒரே சமயம் கபளீகரம் செய்த மாம்பழங்களின் அளவு 3 கிலோ! மேலும் முழுங்க முடியுமா எனக் கேட்டபோது சொல்லாமல் கொள்ளாமல் இன்னொரு கிலோ மாம்பழத்தைச் சாப்பிட்டு முடித்தாராம்!

(ஆதாரம் : இந்தியன் எக்ஸ்பிரஸ்)
தகவல் : ஆல்வின்

---

அவசியம்.''

லக்ஷ்மிநாராயணன் கூறியதற்கு ஒரு நேரடி உதாரணம் வேண்டுமானால் - சமீபத்தில் முதல்வர் ஜெயலலிதா காஞ்சிபுரத்துக்கு ஹெலிகாப்டரில்தான் சென்றார். ஆனால் சென்னை-டு-காஞ்சிபுரம் நெடுஞ்சாலையில் காலை முதல் மாலை வரை ஏகப்பட்ட பந்தோபஸ்து! எதற்கு என்று யாருக்கும் புரியவில்லை! "ஸ்டேஷன்ல என்ன நடக்கிறது என்பதை மைக் மூலம்தான் தெரிந்து கொண்டேனே தவிர போக முடியாதபடி அலைச்சல்'' என்று சொன்னார் புறநகர் இன்ஸ்பெக்டர் ஒருவர். "எல்லோருக்கும் எட்டு மணி நேர வேலைதான். ஆனால் நாங்கள் என்ன பாவம் செய்தோம். எங்களுக்கு ஏன் கிட்டத்தட்ட 18 மணி நேர வேலை? இதெல்லாம் போதாதென்று கோர்ட் கேஸுக்காக வேறு அலைய வேண்டியிருக்கிறது'' என்று பரிதாபமாகச் சொன்னார் ஹெட்கான்ஸ்டபிள் ஒருவர்.

"லாக்-அப் சாவுகளைத் தவிர்க்க சிறந்த வழி, உயர் போலீஸ் அதிகாரிகள் அடிக்கடி போலீஸ் ஸ்டேஷன்களுக்கு விஜயம் செய்து கண்காணிப்பதுதான். அதிகாரிகள் ஸ்டேஷனுக்குள் சென்றவுடன் நேரடியாக லாக்-அப்புக்குச் சென்று எத்தனை பேர் உள்ளே வைக்கப்பட்டு இருக்கிறார்கள் என்பதைப் பார்த்துக் கொண்டு, அவர்களுக்கு முறைப்படி, சரியான தஸ்தாவேஜுகள் தயாரிக்கப்பட்டிருக்கிறதா என்பதைக் கண்டறிய வேண்டும். அதிகாரிகள் இதுபோன்று செயல்பட்டால் ஸ்டேஷனில் பொறுப்பிலிருப்பவர்கள் பயத்துடன் சட்டபூர்வமாகச் செயல்படுவார்கள்'' என்றார் செங்கல்பட்டைச் சேர்ந்த இளம் போலீஸ் அதிகாரி ஒருவர். "தவிர லாக்-அப் சாவுகளுக்குக் காரணமானவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கவும் வேண்டும்'' என்றார்.

தர்மபுரி சிராளன் மரணத்துக்கு குற்றம் சாட்டப்பட்டவர்கள் மாவட்ட கோர்ட்டால் விடுவிக்கப்பட்டாலும், நீதிபதி மிஸ்ரா, நஷ்டஈடு தரவேண்டுமென்று சொன்னது மட்டுமல்லாமல் மாவட்ட நீதிபதியையே பொறுப்பிலிருந்து விடுவித்துள்ளார். காவல் துறையை மட்டுமின்றி நீதித் துறையையும் அரசாங்கத்தையும் தட்டி எழுப்ப வேண்டிய தீர்ப்பு இது.

வி.ஐ.பி. பந்தோபஸ்துக்கு என்று தனிப்படையை உருவாக்கி, சட்டம்-ஒழுங்கு போலீஸ்காரர்களையும், இரைம் போலீஸ்காரர்களையும் அதிலிருந்து விடுவிக்க வேண்டும். மேலும் போலீஸ் துறையினர் ஒரு வழக்குக்கு பத்து ரூபாய் செலவழிக்கக் கூட பலமுறை கோட்டை வரை முட்டி மோத வேண்டியிருக்கிறது. இந்த நிலை மாறுவதுடன், சம்பள விகிதங்களும் கவர்ச்சிகரமாக இருக்க வேண்டும்.

" 'காக்கிச் சட்டைக்குள் கனிவான இதயமும், நியாய அநியாயங்களைக் கணித்துப் பார்க்கும் ஆற்றலும் உருவாவது அவசியம்' என்று சொல்லிக் கொண்டிருந்தால் போதாது; அதற்குத் தேவையான பல நடவடிக்கைகளையும் பல கோணங்களில் சிந்தித்துப் பார்த்து எடுத்தால்தான் நிலைமை சீர்படும்'' என்று முடித்தார் லக்ஷ்மிநாராயணன்.

— ப்ரியன்

மேல் அட்டை வண்ணப்படம் : யோகா

நடிப்பு : சண்முகம்

---



முன்பு ரூபாய் தூய வெள்ளியாலானதாக இருந்தது. வெள்ளிக்கு உருது மொழியில் 'ரூப்யம்' என்று பெயர். அதனால் நாணயத்திற்கு முகலாய மன்னர்கள் 'ரூப்யா' என்று பெயரிட்டனர். அதுவே தற்போது தமிழில் ரூபாய் என்று வழங்கப்படுகிறது.

'பெயர் வந்தது எப்படி?' நூலிலிருந்து
பா. குணா

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

# உங்கள் செல்வம் பெருக...

பொது மக்களிடம் முதலீடு கோரி பல நிறுவனங்கள் பங்கு மார்க்கெட்டுக்கு வந்த வண்ணமிருக்கின்றன. அவற்றில் சிறந்த சில கல்கி வாசகர்களுக்கு இங்கு சிபாரிசு செய்யப்படுகின்றன.

**PENTAFOUR PRODUCTS LTD**

சென்னையைத் தலைமையகமாகக் கொண்டு நன்கு நடந்து வரும் இந்த நிறுவனம் ஏர்கண்டிஷனர்கள், மின் விநியோக சாதனங்கள், மோட்டார் கார் பாகங்கள், ஆகியனவற்றின் தயாரிப்பில் ஈடுபட்டிருப்பதுடன் உணவுப் பொருள்கள் ஏற்றுமதியிலும் வெற்றி கண்டிருக்கிறது. கடந்த பல ஆண்டுகளாக நிறுவனம் செம்மையாக நடந்து வந்திருக்கிறது. தற்போது எலெக்டிரானிக்ஸ் துறையிலும் விரிவாக்கம் செய்ய எண்ணுகிறது. அமெரிக்க நிறுவனம் ஒன்றின் ஒத்துழைப்புடன் glass epoxy copper clad laminates தயாரிக்க முனைந்திருக்கிறது. மோட்டார் கார் பாகங்கள் உற்பத்தியிலும் இன்னும் சிறப்பாகச் செயல்பட விரும்புகிறது. இதற்கெல்லாம் ரூ. 105 கோடி மூலதனம் தேவைப்படுகிறது. இதில் ஏற்கெனவே பங்குதாரர்களாக இருப்பவர்களுக்கு முதல் உரிமை தந்து ஒதுக்கியது போக, பொது மக்களுக்கு ரூ. 36.50 கோடிக்குக் கடன் பத்திரங்கள் (பாண்டு) வழங்கப் படுகின்றன. ஒவ்வொரு பாண்டும் ரூ. 360 மதிப்புடையது. இதற்கு வட்டி கிடையாது. ஆனால் ஆறாவது மாதம் நிறைவதற்கு முன் இவை ஒவ்வொன்றும் 10 பங்குகளாக மாற்றப்படும். அதாவது ஒவ்வொரு பத்து ரூபாய் பங்கையும் ரூ. 36 கொடுத்து பெறுவதாகும். நிறுவனம் ஏற்கெனவே நன்கு நடந்து வருவதையும் தற்போது இதன் பங்குகள் மார்க்கெட்டில் ரூ. 88க்கு விலை போகிறது என்பதையும் கணக்கில் கொண்டால் நீண்டகால நோக்கில் மிக நல்லதொரு முதலீடு என்பது நிச்சயம்.

**VEEJAY LAKSHMI ENGINEERING WORKS LTD.**

கோவையில் அமைந்துள்ள இந்த நிறுவனம், ஏற்கெனவே லாபகரமாக இயங்கி நூற்பு, நெசவாலைகளுக்குத் தேவையான இயந்திரங்களை உற்பத்தி செய்து வருகிறது. இந்நிறுவனத்தின் சேர்மன் V.J. ஜெயராமனுக்கு இத் துறையில் 25 ஆண்டு அனுபவம் உண்டு. கோவையில் உள்ள மற்றொரு வெற்றி நிறுவனமாகிய Textools Ltd. ன் மானேஜிங் டைரக்டரும் கூட. தற்போது வீஜே-லக்ஷ்மி விரிவாக்கம் கருதி புதியதொரு தொழிலகம் தொடங்குகிறது. இதற்கு ரூ. 24 கோடி தேவைப்படுகிறது. இதில் தொழில் முனைவோர்களே அளிக்கும் தொகை போக மீதம் ரூ. 17 கோடிக்கு பொது மக்களுக்குப் பங்குகள் விநியோகிக்கப்படுகின்றன. ஒவ்வொரு பங்கையும் ரூ. 75 கூடுதல் விலை தந்து ரூ. 85க்குத்தான் பெற முடியும். என்றாலும் நிறுவனத்தின் பின்னணி, இந்நாள் வரை வெற்றிகரமாக நடந்து வந்திருக்கும் போக்கு முதலியவற்றை வைத்துப் பார்த்தால் பங்குகளின் விலை உயர நிறையவே வாய்ப்புண்டு. நீண்ட கால நோக்கில் மற்றொரு நல்ல முதலீடு.

**B.P.L. ENGINEERING LTD**

B.P.L. என்பது இன்று மிகவும் பிரபலமாகி விட்ட எழுத்துக்கள். டீ.வி., வீடியோ டெக், ரிகார்டர், வாஷிங் மெஷின் என்று வீட்டு உபயோக சாதனங்கள் ஏராளமாக உற்பத்தி செய்கிற நிறுவனம். B.P.L. குரூப் நிறுவனங்களில் ஒன்றுதான் B.P.L. இன்ஜினீரிங் என்பது. நல்ல முன்னேற்றம் கண்டுள்ள இது, தற்போது ஜப்பானிய ஸான்யோ எலெக்டிரிக் நிறுவனத்துடன் தொழில் நுணுக்க ஒப்பந்தம் செய்து கொண்டு கம்ப்ரெஸர்கள், மோட்டார்கள் முதலியன தயாரிக்க திட்டமிட்டுள்ளது. இதற்கு ரூ. 139 கோடி மூலதனம் தேவை. இதில் அயல்நாட்டுக் கடன், வங்கிகள் கடன், தொழில் முனைவோரின் முதலீடு முதலியன போக ரூ. 79 கோடிக்குப் பங்குகள் விநியோகமாகின்றன. இதில் ம்யூசுவல் ஃபண்டுகள், அயல்நாட்டு முதலீட்டாளர்கள் போன்றோருக்கு பத்து ரூபாய் பங்குகள் ரூ. 80 கூடுதல் விலையில் (ரூ.90) விநியோகிக்கப்படுகின்றன. இந்தியப் பொதுமக்களுக்குச் சலுகையாக ரூ. 65 கூடுதல் விலைக்குப் பத்து ரூபாய் பங்குகள் வழங்கப்படுகின்றன. அதாவது ஒவ்வொரு பங்கையும் ரூ. 75 தந்து பெற வேண்டும். B.P.L. குரூப்பின் வெற்றிக் கதையை அறிந்தவர்கள் இதனையும் ஒரு நல்ல முதலீடாகவே நிச்சயம் கருதுவர்.

- வி. கோபாலன்

## கரம் மசாலா

# தேடினாலும் கிடைக்கமாட்டார் வாலி!

❖ வ.உ.சி. செக்கிழுத்தது அனைவரும் அறிந்த செய்தி. அவர் சிறையில் இழுத்த செக்கை நீங்கள் இப்போதும் காண முடியும்! எங்கே? சென்னை ராஜாஜி மண்டப வளாகத்தில்.

❖ ஆனந்த விகடன் பத்திரிகை அலுவலகம் முன்பு சிறு பிள்ளையார் கோவில் இருக்கிறது. பிள்ளையாருக்குப் பெயர் : ஆனந்த விநாயகர்.

❖ ஜெயின் டீ.வி. தனது தினசரி இரண்டரை மணி நேர தமிழ் ஒளி பரப்பை நிறுத்திவிடுவது குறித்து ஆலோசனை செய்து வருவதாய் ஒரு தகவல் வரும் போது, கூடவே வரும் இன்னொரு தகவல் : ஜீ டீ.வி. விரைவில், தினசரி ஒன்றரை மணி நேரத் தமிழ் ஒளி பரப்பைத் துவக்கவிருக்கிறது!

❖ கவிஞர் வாலியின் பெயரை, சென்னை நகர டெலிபோன் டைரக்டரியில் Vali, Vaali, Valee இப்படி எங்கே தேடினாலும் கண்டுபிடிக்க முடியாது. அப்புறம்? Vaalee என்றுதான் இருக்கிறது.

❖ தினமணி ஆசிரியர் மாலனின் ஆபீஸ் அறையில் ஓர் இலக்கியவாதி, ஓர் ஆன்மீகவாதி இருவரது படமும் இருக்கிறது. அவர்கள் : பாரதியார், ரமண மகரிஷி.

❖ சென்னை தொலைக்காட்சிக்காக ஓரிருவார விளம்பரதாரர் நிகழ்ச்சிகள் தயாரிக்கும் வாய்ப்பு பலருக்கு வழங்கப் பட்டுள்ளது. குஷ்பு, மகாநதி புகழ் ஷோபனா நடிக்கும் ஒன்றை டைரக்ட் செய்பவர் சுரேஷ்கிருஷ்ணா. லேனாதமிழ் வாணனின் 'கம்ப்யூட்டர் கொலை' இரண்டு வாரத்துக்கு ஓ.கே. செய்யப்பட்டுள்ளது.

❖ பிரபல குழந்தை மருத்துவரான ஜே. விஸ்வநாத்தின் கிளினிக்கில் வைக்கப்பட்டிருக்கும் ஒரு வாசகம் : ''பெரியவர்களுக்கு அனுமதி கிடையாது - குழந்தைகளை அழைத்து வராவிட்டால்.''

* வாலி : தேடினாலும்...

❖ ஆவடியில் ராணுவத்தினருக்கான உடை தைக்கும் தொழிற்சாலை இருக்கிறது. அங்கே, ராணுவ ஆர்டர்கள் குறையவே, பார்த்தது நிர்வாகம். அமெரிக்காவின் பிரபல வான் ஹூசென் நிறுவனத்துக்காக சட்டைகள் தைத்துத் தர ஆரம்பித்து விட்டது. 50 ஆயிரம் சட்டை தைக்கும் ஆர்டரை குறித்த காலத்தில் தைத்துக் கொடுத்துள்ளது. கூலி : சட்டைக்கு இரண்டு டாலர்.

❖ சரஸ் சலில் - இது கடந்த ஆண்டு பிப்ரவரியில் துவக்கப்பட்ட இந்தி பத்திரிகை. இப்போது இதன் சர்குலேஷன் எவ்வளவு தெரியுமா? ஐந்து லட்சத்து 20 ஆயிரம் பிரதிகள்.

தொகுப்பு : மௌலி



* குஷ்பு : டீ.வியில்....



# மீன் இனி சிக்கும்!

கல்யாண வீட்டின் குதூகலங்கள், சந்தோஷக் கூச்சல்கள் ஆரவாரங்கள் இவைகள் எதிலுமே ராஜனின் மனம் ஈடுபடவில்லை. வெளிப்பார்வைக்குச் சிரித்த முகத்துடன் காணப்பட்டாலும் உள்ளுக்குள் அவனுடைய மனம் அழுது கொண்டுதான் இருந்தது.

ராஜன் வீட்டாருக்கு அவ்வளவாக நெருக்கமில்லாத தூரத்து உறவினரின் வீட்டுக் கல்யாணம் அது. அவனுடைய அப்பாவுக்கு அந்தக் கல்யாணத்தில் கலந்து கொள்ளப் பிரியமில்லை. "காலம்பற நாலு மணிக்கெல்லாம் பஸ்ஸைப் பிடிச்சுப் போகணும். மெயின் ரோட்டுல எறங்கி மூணு கிலோ மீட்டர் நடக்கணும். யாரால் முடியும்?" என்று சலித்துக் கொண்டவர், 'உறவுக்காரங்க, போகலேன்னா கோவிச்சுக்குவாங்களே,' என்று நினைத்து, "அதுதான் அந்த தண்ட சோத்து தடிராமன் இருக்கானே, அவன் போவட்டும். ரெண்டு வேளை சாப்பாடாவது இங்கே மிச்சம் ஆகும்" என்று சொல்லி, போகவர பஸ் சார்ஜுக்கான தொகையை மட்டும் சரியாக எண்ணிக் கொடுத்து ராஜனை அனுப்பி வைத்திருந்தார்.

ராஜனுக்கும் கல்யாணத்திற்கு வர அவ்வளவாக விருப்பம் இல்லைதான். இருந்தாலும் அவனால் மறுக்க முடியாது. புதிய இடம்; புது மனிதர்கள். கொஞ்சம் பொழுது போகுமே... இன்னிக்கு ஒரு நாளாவது அப்பா-அம்மாவிடம் பேச்சுக் கேட்காமல் இருக்கலாமே என்று தன்னைச் சமாதானப் படுத்திக் கொண்டு புறப்பட்டு வந்திருந்தான்.

வந்த இடத்திலும் சோதனை தொடர்ந்தது.

"ஏண்டாப்பா, நீ ராமநாதன் பிள்ளை தானே! உங்கப்பன் ரொம்பக் கஷ்டப்பட்டு நிலம், வீடு எல்லாம் வித்து உன்னை நிறைய படிக்க வச்சானே? இப்ப என்ன பண்றே?

ஏதாவது வேலைக்குப் போறியா? இல்லே சும்மாதான் பொழுது போக்கிட்டிருக்கியா?" என்ற கேள்விகள்.

"அதான் இம்மாம் தொலைவு கல்யாணத் துக்குன்னு அனுப்பி வச்சிருக்காரே அந்த மனுஷன். அதுலேர்ந்து தெரியலே?... சும்மா தான் இருப்பான்" என்ற கிண்டலான ஹேஷ் யங்கள்.

மனம் வெறுத்து விட்டது ராஜனுக்கு.

கல்யாண வீட்டை விட்டு வெளியே வந்தவன், காலாற நடக்க ஆரம்பித்தான். துக்கம் அவன் தொண்டையை அடைத்தது.

அவன் என்ன வேலைக்கு போகமாட் டேன் என்றா சொல்கிறான்? அல்லது எனக்கு 'பாங்க் ஆபீஸர் உத்யோகம்தான் வேண்டும்' என்று பிடிவாதமாக இருக் கிறானா? ஏதாவது கொஞ்சம் கௌரவமான, சுமாரான சம்பளம் வரக்கூடிய வேலைதான் அவன் கனவு.... அது நிறைவேறாததால்தான் இவ்வளவு கஷ்டம்.

'வேலை கிடைக்கலே, வேலை கிடைக்க லேன்னு சும்மா உக்கார்ந்திருந்தா எப்படி? நாலு பேரைப் பாக்கணும். கேக்கணும். கஷ்டப்பட்டுத் தேடணும். அப்பத்தான் வேலை கிடைக்கும். இதையெல்லாம் சொல் லியா தர முடியும்? தானாத் தெரியணும்?' என்று பெற்றவர்கள் குத்தும் போது தற் கொலை எண்ணங்கள் எழும். அடக்கிக் கொள்வான்.

'நாலு பேரைப் பாத்தா உடனே வேலை கிடைச்சுடுமா? வேலை என்ன நடுரோட் லேயா கிடக்குது? தேடி எடுத்துக்கறதுக்கு..'

# சத்யா ஸ்ரீனிவாசன்

என்று எரிச்சல் வரும். வாய் மூடி மௌன மாக அவனுடைய அப்பா சொன்ன நாலைந்து பெரிய மனிதர்களைப் பார்க்கப் போவான். ஒரு பயனும் இருக்காது. 'எல்லாம் இவன் ராசி! நமக்குன்னு வந்து பொறந் திருக்கு பாரு' என்று அப்பாவிடம் திட்டு வாங்குவான். அதோடு சரி. மறுநாள் அடுத்த படலம். இது தொடர்ந்து கொண்டேயிருந் தது.

**யோ**சித்தபடி நடந்து கொண்டிருந்த ராஜனின் பார்வையில் பட்டார் அந்தப் பெரியவர்.

அதிகமாகத் தண்ணீர் இல்லாத ஒரு குட்டையில், தூண்டிலைப் போட்டுவிட்டு, குச்சியைப் பிடித்தபடி கரையோரமாக அமர்ந்திருந்தார் அவர். வயது எழுபது இருக் கும். கருத்த குள்ளமான உருவம். நரைத்துப் போன தலைமுடி. இடையில் ஒரு நாலுமுழ வேஷ்டி.

அவரைப் பார்த்த ராஜனுக்கு லேசான சிரிப்பு வந்தது. குட்டையிலே கொஞ்சமாத் தான் தண்ணி தேங்கியிருக்கு. இதுலே என்ன பெரிசா மீன் வந் துடப்போவு துன்னு இவரு உக் காந்திருக்காரு? என்று எண்ணிய





''சினிமாவால குழந்தைங்க கெட்டு குட்டிச் சுவராப் போகுது!''

''ஏன் அப்படிச் சொல்றீங்க?''

''இறந்து போன என் அப்பா பற்றி பேச்சு வந்தது. என் பேத்தி கேட்கிறா, அவரை யாராவது கத்தியால் குத்தினாங்களா இல்லை துப்பாக்கியால் சுட்டாங்களான்னு!''

— வெங்கடேசன்

ராஜன், அந்தப் பெரியவரை அணுகினான்.

"பெரியவரே என்ன பண்றீங்க? இந்தக் குட்டையிலே என்ன மீன் கிடைச்சுடப் போவுது? பெரிய ஆறு, குளம் இருக்கற இடத்துக்குப் போனா பெரிய பெரிய மீன் கிடைக்கும். அதை விட்டுவிட்டு இங்கே உக்கார்ந்து 'டைம் வேஸ்ட்' பண்ணிட்டு இருக்கீங்களே?" என்றான்.

தலையைத் திருப்பி ராஜனைப் பார்த்த அந்தப் பெரியவரின் கண்கள் பனிச்சென்றிருந்தன.

''அதுசரி... பெரிய ஆறு குளம்னு தேடிப் போயிட்டா இங்கே இருக்கற வேலையை யாரு பாக்கறது தம்பி?'' என்ற பெரியவர், "நா இதையே நம்பி இல்லைங்க. செங்கல் சூளையிலே வேலை செய்யறேனுங்க. மத்தியானம் ரெண்டு மணி நேரம் ரெஸ்ட்ங்க'... அப்ப குடிசையிலே சும்மா இருந்தா தூக்கம் வரும். தூங்கி எழுந்து வேலைக்குப் போனா வேலை செய்யக் கஷ்டமா இருக்கும். அதான் தூக்கம் வராம இருக்கறதுக்காக இப்படி வந்து உக்காந்திருக்கேனுங்க. பொழுதுக்குப் பொழுதும் போவுது; நாலஞ்சு மீன் கிடைச்ச மாதிரியும் இருக்கும். குழம்புலே போட ஆச்சுங்களே! கடைக்குப் போய் காய்கறின்னு காசைச் செலவு பண்ண வேணாமுங்களே. இப்படி ஏதாச்சும் வேலை பண்ணிட்டே இருந்தாதானுங்களே, நம்மளை மாதிரி ஏழைங்க பொழைக்க முடியும்?'' என்று பொக்கை வாய் தெரியச் சிரித்தபடி அந்தப் பெரியவர் சொன்னதில் என்னவோ புரிந்தது போல் இருந்தது ராஜனுக்கு.

இந்தப் பெரியவர் தள்ளாத வயதில் செங்கல் சூளையில் வேலை பார்த்துக் கொண்டு ரெஸ்ட் டைமையும் வீணடிக்காமல் பிழைப்புக்கு வழி தேடிக் கொள்கிறார். இது போன்ற குக்கிராமத்திலேயே இதற்கு வாய்ப்பு இருக்கிறது என்றால்... இவ்வளவு படித்த நமக்கு அவ்வளவு பெரிய ஊரில் ஏதாவது வேலை கிடைக்காமலா போகும்? ஒரு வேளை அப்பா அம்மா சொல்வது போல் நாம்தான் சரியாக முயற்சி செய்வதில்லையா என்று தோன்றியது.

'ராஜன், நீதான் எம்.காம் ஆச்சே. என் தம்பிக்குக் கொஞ்சம் அக்கௌண்டன்ஸி சொல்லிக் கொடேன்' என்று கேட்ட தன் நண்பன் ரவியின் வேண்டுகோள்....

'தம்பி, சாயங்காலம் சும்மாதானே இருக்கீங்க.... நம்ப கடைப்பக்கமா வாங்களேன். நிறைய சரக்கு வருது, போவுது. சரிவர கணக்கு வச்சுக்க என்னாலே முடியலே. ஒரு அரைமணி நேரம் உக்காந்து அதை எழுதிக் கொடுத்துட்டுப் போங்களேன்...' என்று அழைத்த மளிகைக் கடைக்காரர் அண்ணாமலையின் அழைப்பு... இவையெல்லாம் அவன் நினைவில் ஓடின. அவைகளை ஏற்காதது தன் தவறு என்றும் தோன்றியது அவனுக்கு. அவைகளை ஏற்றிருந்தால் அவை மூலமாகத் தன்னைப் பற்றி இன்னும் நாலு பேருக்குத் தெரியவந்திருக்குமே. அவர்கள் யாராவது தன்னை உபயோகப்படுத்திக் கொண்டிருப்பார்களே" என்று தோன்றியது. நாம்தான் கிடைத்த வாய்ப்பையெல்லாம் நழுவ விட்டுட்டு தவிக்கிறோமோ... என்று எண்ணத் தொடங்கிய ராஜன், 'இப்போது வீட்டுக்குத் திரும்பியதும் முதலில் ரவியின் தம்பிக்கு டியூஷன் ஆரம்பிக்க வேண்டும். சாயங்காலம் மளிகைக் கடைக்குப் போய் கணக்குப் பார்த்துத் தர வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டபடி திரும்பி நடந்தான்.



"டீ. வி.யைக் கண்டு பிடித்தது யார்?"

"வேணாம், உட்ருங்க. ஃபாரின்ல போய் அவரைத் தேடி கண்டு பிடிச்சு உதைக்கணுமா?"

— ஆர். ரகோத்தமன்

## மீண்டும் வந்துவிட்டது... உங்களுடைய செல்ல மகளுக்கு.



# ராஜ் லக்ஷ்மி

### யூனிட் ப்ளான்

அவளுடைய வளமான எதிர்காலத்திற்கு




## சிறப்பம்சங்கள்:

- காலவரையறையற்ற ப்ளான்.
- குறைந்தபட்ச முதலீடு ரூ. 1500 மற்றும் அதற்குமேல் ரூ. 500-ன் மடங்கில். உச்ச வரம்பு கிடையாது.
- தனிநபர், மாநில, மத்திய அரசு, ட்ரஸ்ட், சங்கம், கார்ப்பொரேட் பாடி — 5 வயது வரையுள்ள பெண் குழந்தைக்காக முதலீடு செய்யலாம்.
- குழந்தை பிறந்ததும் செய்யும் ரூ. 1500 முதலீடு 20 ஆண்டுகளில் ரூ. 21,000 ஆகலாம். வளர்ச்சி நிலை ப்ளானில் சேர்ந்திடும் வயதைப் பொறுத்திருக்கும்.
- விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப் பட்ட தேதியிலிருந்து முதிர்வுறும் தேதி கணக்கிடப்படும்.
- ஒவ்வொரு காலவரையிலும் அறிவிக்கப்படும் போனஸ் முதிர்வடைந்ததும் வழங்கப்படும்.

[illegible]



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101

கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 214973 • சென்னை. போன்: 517101, 517190 • மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 27060

UTI-59/94 TA B




TRADE MARK

**47** ஆண்டுகளாக உங்கள் பத்திரங்களைப்
பாதுகாக்க எங்கள் சேவல் மார்க் ஃபைல்கள்
பயன்பட்டு வருவதுபோல உங்கள் சேமிப்புகளை
பாதுகாக்க எங்கள் டெபாசிட் திட்டம்...

**குமுலேட்டிவ் டெபாசிட்டில் முதலீடு செய்து மூன்றே ஆண்டுகளில் இருமடங்காக பெறுங்கள்.**

கணக்கிடப்படும் வட்டி விகிதம்

# 24%

PER ANNUM

| மாதங்கள் | ரூ.1000க்கு முதிர்வுத் தொகை | வருடாந்திர வட்டி சதவீதம் |
|---|---|---|
| 12 | ரூ. 1260 | 26% |
| 24 | ரூ. 1587 | 29.35% |
| 36 | ரூ. 2000 | 33.33% |
| 48 | ரூ. 2520 | 38% |
| 60 | ரூ. 3175 | 43.5% |

குறைந்தபட்ச டெபாசிட் ரூ.1000

# MUTHUVEL INDUSTRIES

**Mfrs. of COCK BRAND OFFICE FILES**
**Angappa Chettiar Industrial Complex,**
20-A, Round Road, P.B. 32,
DINDIGUL - 624 001. TAMILNADU.

✆ Off: (0451) 23316, 25260 & 27637. Res: 25643 & 23726.
Grams: COCKFILE.

*உங்கள் முன்னேற்றமே எங்கள் வளர்ச்சி*

ADWAYE/MM/4698/Tam BR

# வேதபுரத்து வியாபாரிகள்

12

இந்திரா பார்த்தசாரதி

**'இந்திரபிரஸ்த நாட்டுத் தலைவருக்குப் பதின்மூன்று மொழிகளில் மௌனம் சாதிக்கத் தெரியும்; எட்டு மொழிகளில் புன்னகை பூக்கத் தெரியும்'–**

*இந்திர பிரஸ்த வரலாறு–ஆசிரியர்: சுரேந்திர பிரஸாத். பக்:376)*

நஞ்சுண்டன் சோபாவில் உட்கார்ந்தான். அவன் உள்ளே வந்தபோது சொல்லிக் கொண்டு வந்ததின் பொருளைக் கிரகிக்க முயல்வது போல், அபூர்வா சிறிது நேரம் மௌனமாக இருந்தான்.

"எஸ்.. நீங்கள் பெரிய ஆளாக ஆகப் போகிறீர்கள்" என்றான் நஞ்சுண்டன்.

"ஆபத்தான விஷயம்."

"ஏன் அப்படிச் சொல்றீங்க?"

"மேலேயிருந்து கீழே விழுந்தா நல்லா அடி படும்..."

"நீங்க விழுவீங்கன்னு யார் சொன்னாங்க?"

"நான் இங்கே வந்ததிலேந்து பாத்துகிட்டுருக்கேன்."

"நான் மேலேயிருக்கேனா, கீழே இருக்கேனா?" என்று கேட்டான் புன்னகையுடன்.

"மத்தவங்க நீங்க மேலே இருக்கிறதா நினைச்சிக்கிட்டிருக்காங்க, அதான் எனக்குத் தெரியும்."

"நீங்க என்ன நினைக்கறீங்க?"

"அரசியல்லே சேர்ந்தப்புறம் நினைக் கிறதேது. நினைக்க என்ன உத்தர வாறதோ அதை நினைக்கிறேன்."

"நீங்க ஒரு 'டிப்ளமாட்!' அதான் ஒரு ராஜ தந்திரமான காரியம் செய்ய, தலைவர் உங்களைத் தேர்ந்தெடுத்திருக்கார்."

"புரியலே."

"வந்த விருந்தாளிக்குக்கு காப்பி கிடையாதா?" என்று கேட்டுக் கொண்டே, சுவர் ஓரத்திலிருந்த ஆளுயர மாலைகளின் அருகில் சென்று, அவற்றையும் அபூர்வாவையும் கேள்விக்குறி முகத்தில் படர, மாறி மாறி, புன்னகையுடன் பார்த்தான்.

அபூர்வா எழுந்து உள்ளே சென்றான். வனிதா காப்பி தயாரித்துக் கொண்டிருந்தாள்.

"போட ஆரம்பிச்சுட்டியா? தாங்க்ஸ்" என்றான் அபூர்வா.

அவள் சமையலறையைவிட்டு வெளியே வந்தாள்.

"யார் வந்தாங்க, மாலை போட?" என்று கேட்டான் நஞ்சுண்டன்.

"தொண்டர்கள் அல்லது விசிறிகள்னு சொல்லணுமா?"

"இது, நீங்க அரசியல் மொழி பேசறீங்களா, இல்லாட்டா, சினிமா மொழி பேச நீங்களாங்கிறதைப் பொறுத்த விஷயம்..."

"நம்முடைய தாய்த்திரு நாட்டிலே இப்பொ ரெண்டும் ஒண்ணுதானே? சரி... இது கிடக்கட்டும். தலைவர் என்னை எதற்குத் தேர்ந்தெடுத்திருக்காரு?"

"ரொம்ப நாசுக்கான ராஜதந்திர விவகாரம். இப்பொ பேசின மாதிரி, நம்முடைய தாய்த்திருநாட்டிலே ரெண்டும் ஒண்ணு தானேன்னு பேசினீங்கன்னா இது 'டிப்ள மஸி' இல்லே..."

"என்ன 'நாசூக்கான ராஜதந்திர விவகாரம்!"

வனிதா காப்பியைக் கொண்டு வந்தாள். நஞ்சுகண்டன் அவள் நீட்டிய தட்டிலிருந்து காப்பி கோப்பையை எடுத்துக் கொண்டான்.

அவளைப் பார்ப்பதை அவன் தவிர்ப்பது போல் அபூர்வாவுக்குப் பட்டது.

தன் கோப்பையை வாங்கிக் கொண்ட அபூர்வா கேட்டாள்: "மிஸ்டர் நஞ்சுகண்டன், இவளை உங்களுக்குத் தெரியுமா?"

அவன் இந்தக் கேள்வியை எதிர் பார்க்கவில்லை என்பது அவன் லேசாகத் திடுக்கிட்டதினின்று தெரிந்தது.

"தெ...ரி...யாது... இவங்கதானே உங்க செக்ரட்ரி, தோழி... எல்லாம்?" என்றான் நஞ்சுகண்டன் புன்முறுவலுடன், சற்று திடுக்கிட்டதைச் சாமர்த்தியமாகச் சமாளித்துக் கொண்டு.

"இவளை உங்களுக்குத் தெரியும்னு நினைக்கிறேன்..." என்றாள் அபூர்வா நிதானமாக, அதே சமயத்தில் ஓர் உறுதியான குரலில்.

"தெரியும்" என்றாள் வனிதா தன் காப்பியை எடுத்துக்கொண்டு, அவனருகில் உட்கார்ந்தவாறு.

நஞ்சுகண்டன் மௌனமாக இருந்தான்.

"எப்படித் தெரியும்?" என்றாள் அபூர்வா.

"இப்பொ அது முக்கியமில்லே... நீங்க வெளி நாட்டுக்குப் போகப் போறதைப் பத்திப் பேசுவோம்."

"வெளி நாடா?" என்றாள் அபூர்வா ஆச்சர்யத்துடன்.

"ஆமாம்... வெளிநாடுதான்... அதான்... சொன்னேனே, ராஜதந்திர விவகாரம்..."

"நீங்க போகலாமே...? நான் எதுக்காகப் போகணும்?"

"உங்கள் யோசனைக்கு நன்றி. நான் போகலே. நீங்கதான் போறீங்க."

"வெளி நாடுன்னா, எங்கே?"

"இப்பொ ஒரு உண்மையைச் சொல்லப் போறேன் உங்களுக்கு. அதிர்ச்சியா இருக்கலாம். அதாவது வேதபுரம் பரிபூரணமான சுதந்திர நாடு இல்லே. இந்திர பிரஸ்தத்துக்குக் கட்டுப்பட்டது. ஆனா, நம் நாட்டிலே, ஜனங்க நம்ம தலைவர்தான் உலகத்தையே ஆண்டுக்கிட்டிருக்கிறதா நினைச்சுக்கிட்டிருக்காங்க. தப்பில்லே... நம்ம தலைவருடைய வீரம், தீரம், மேதைத் தனம், சகல கலா வல்லமை, நற்பண்பு..."

"சரி. மேலே சொல்லுங்க..."

நஞ்சுகண்டன் முகத்தில் புன்னகையின் கீற்று. அவன் மேலே தொடர்ந்தான். "இந்திர







பிரஸ்தத்துத் தலைவர், நம்ம தலைவர் மாதிரி, அவரும் கெட்டிக்காரர்தான். பதிமூனு பாஷையிலே மௌனம் சாதிப்பாரு, எட்டு பாஷையிலே புன்னகை செய்வாரு... இப்பொ அவருக்கு ஒரு பிரச்னை...."

"என்ன பிரச்னை, சொல்லுங்க..." என்றாள் அபூர்வா.

"இந்திரப் பிரஸ்தத்துத் தலைவரு ஒரு நாள் திடீர்னு 'எல்லாரும் சம்பாதிங்கடா'ன்னு எல்லா கட்டுப்பாட்டையும் விலக்கிட்டாரு. இப்பொ நம்ம நாட்லேயும் எல்லாரும் சம்பாதிக்கிறாங்க. உண்டியல் வச்சிருக்கோம், சம்பாதிக்கிற பணமெல்லாம் தலைவர் பேரை வச்சுக்கிட்டு சம்பாதிக்கிறோம். உள்நாட்டிலேயே புழங்குது பணம். இந்திர பிரஸ்தத்துலே என்ன ஆச்சுது. அரசாங்க சொத்தையும் சேர்த்து வெளிநாட்டுக்கு வியாபாரம் பண்ணிட்டாங்க... யாருக்கு எது சொந்தம்னு தெரியலே!"

"இந்திர பிரஸ்தத்துத் தலைவரு ஒரு கமிஷன் போட்டாரு, இதைப் பத்தி விசாரிக்க. கமிஷன் போடறதிலே அவர் மன்னன். இப்படிக் கமிஷன் போட்டே, அந்த ஃபைல்களெல்லாம் ஏராளமாக சேர்ந்து போய், இப்பொ செக்ரட்டேரியட்டுலேயே ஆளுக உட்கார இட மில்லாமெ, வெராந்தாவிலே உட்கார்ந்துக்கிட்டு வேலை செய்யறதா கேள்வி. அது கிடக்கட்டும்.. விஷயத்துக்கு வரேன்... இப்பொ கஜானாவைக் காணோம். இதுதான் பிரச்னை. யாரு எங்கே போய் ஒளிச்சு வச்சுட்டாங்களோ தெரியலே. பதிமூனு பாஷையிலே மௌனம் சாதிக்கத் தெரிந்தவரு, எட்டு பாஷையிலே சிரிக்கிறவரு, இப்பொ 'உம்'னு - இது எந்த பாஷையிலேன்னு தெரியலே - முகத்தை வச்சுக்கிட்டு சோர்ந்து போய் உட்கார்ந்திருக்காரு..."

அவன் மேலே தொடராமல், காப்பிக் கோப்பையை லேசாக உருட்டிக் கொண்டிருந்தான்.

"இப்பொ நான் என்ன செய்யணும்?" என்று கேட்டாள் அபூர்வா நேரடியாக.

"சொல்றேன். ஆனா ஒண்ணு, நீங்க வெளி நாட்டிலேந்து இங்கே வந்திருக்கிங்கன்னு இந்திர பிரஸ்தத்திலே யாருக்கும் தெரியக் கூடாது. தெரிய வேண்டிய அவசியமுமில்லே. வனிதாவையும் நீங்க கூட்டிக்கிட்டுப் போகலாம்."

"என்ன செய்யணும்னு சொல்லாமெ, மந்தரச் சொல்லிக்கிட்டிருக்கிங்களே! சொன்னாத் தானே, என்னாலே செய்ய முடியுமா

இல்லையான்னு நான் சொல்ல முடியும்."

"மன்னிக்கவும்... நீங்க செய்ய முடியுமா இல்லையான்னு நீங்க தீர்மானிக்க இடமில் லேன்னு நினைக்கிறேன். இது தலைவர் உத் தரவு" என்றான் நஞ்சுகண்டன் புன்னகை யுடன்.

"பயமுறுத்தறீங்களா? என்னை யாரும் கட்டுப்படுத்த முடியாது... இஷ்டப்பட்டா நான் இப்பொவே..." என்று அவன் சொல்லி முடிப்பதற்குள் அவன் குறுக்கிட்டான்.

"ப்ளீஸ்.. தலைவர் உங்க பேரிலே நம்பிக்கை வச்சு பிரியமா உத்தரவிடறாரு... ஏன் பெரிய பெரிய வார்த்தையெல்லாம் போட்டு என்னை நீங்க பயமுறுத்தறீங்க? நீங்க புஸ்தகம் எழுத வந்திருக்கீங்க... எல் லாமே அனுபவந்தானே?"

"சரி... சொல்லுங்க..."

"அந்தக் கஜானாவைத் தேடி நீங்க கண்டு பிடிச்சாவணும். அந்த நாட்டுத் தலைவரு சந்தோஷமா சிரிக்கணும்."

"ரெண்டும் கஷ்டமான காரியங்கள். இதெ நான் ஏன் செய்யணும்னு புரியலே..."

"இப்படிச் செய்தா, வேதபுரத்துக்கு நல்ல பேரு.... இங்கே நமக்குத் தொந்தரவு கொடுக்கிற ஆளுக வாயை மூடலாம்..."

"புரியலே... இங்கே யாரு நமக்குத் தொந் தரவு கொடுக்கிறாங்க?"

"இந்திர பிரஸ்தத்துத் தலைவரு ஆளுக இங்கே இருக்காங்க... அதாவது அவரோட கட்சி ஆளுக... நம்ம சட்ட சபையிலேயே இருக்காங்க. நம்ம தலைவரு தயவிலே சட்ட சபைக்கு வந்தவங்க. இப்பொ அவங் கன்னே சிலபேரு தலைவர் படத்துக்கு முன் னாலே விழுந்து கும்பிடறதில்லே. இன்னும் இன்னும் என்னன்ன அக்கிரமமோ அதெல் லாம் செய்துக்கிட்டிருக்காங்க..."

"அந்தக் கட்சி ஆளுக எத்தனை பேரு?"

"பதினைஞ்சுபேரு...ஆனா ஒவ்வொரு ஆளும் அவனவன் கட்சி... இதனால்தான் நம்ம தலைவராலே அவங்களைச் சமாளிக்க முடியுது."

"ஒண்ணு எனக்கு புரியலே... வேதபுரத்து ஜனங்களுக்கு,வேதபுரம், இந்திர பிரஸ்தத்துக் குக் கட்டுப்பட்டது; இந்திர பிரஸ்தத்துக் கட்சி ஆளுங்களுக்கு உத்தரவு அவங்க தலைவர் கிட்டேருந்து வந்துக்கிட்டிருக்கிற விவரம் கூட தெரியாதுங்கறீங்களா?"

"சாதாரண ஜனங்களுக்கு ஒண்ணும் தெரியாது. எங்க ஸ்தல புராணம் சொல் லுது, 'கல்லும் மண்ணும் எங்க தலைவரும் உலகத்திலே தோன்றிய சமயம் ஒரே சமயம்னு... சும்மா பொறக்கலே... கையிலே

## அருள்வாக்கு

**பகவத் ஸங்கல்பம் நமக்குப் புரியாது. என்றாலும், அவன் சாஸ்த்ர வாயிலாகக் கலி அதர்ம யுகம் என்று நமக்குத் தெரி விக்கும் போது, அப்படியே அதர்மத்தில் லோகம் நசித்துப் போவதற்காகத்தான் இந்த யுகம் அவனால் தீர்மானமாக ஸங்கல்பிக் கப்பட்டிருக்கிறதென்று அர்த்தம் செய்து கொண்டு விடக் கூடாதென்றே தோன்று கிறது. 'லோகம் அவனுக்கு நாடகம். அவன் கதை எழுதி, டைரக்ட் பண்ணுகிற நாடகம். ரஸ வைசித்ர்ய ருசிக்காக (காவிய ரஸங் களில் மாறுபாடு செய்து சுவை கூட்டுவதற் காக) நாடகாசிரியர் ரௌத்ரம், பீபத்ஸம், பயம் ஆகியவையுள்ள ஸீன்களையும் கல்பிப்பது போல அவனும் கலியில் செய்வதாயிருக்கலாம்' என்று சொன்னாலும்**

ஒரு வாள்... அதனால்தான் நாங்க பேசறது, செய்யறது எல்லாமே போர் சம்பந்தப் பட்டதா இருக்கும். நாங்க தினசரி கொடுக் கிற அறிக்கையிலே அனல் பறந்து, இந்திர பிரஸ்தம் பூரா சூடாகி, சூட்டைப் பொறுக்க முடியாமெ, இந்திர பிரஸ்தத்துத் தலைவரே சொல்லிட்டாரு, 'உங்களுக்கு சுயாட்சி தரேன்... அறிக்கை மட்டும் விடா தீங்கன்னு!' அதனால்தான். இது சுயாட்சி தான்; சுதந்திரமில்லேன்னு ஜனங்களுக்கு இன்னும் தெரியாது... இன்னும் சொல்லப் போனா நம்ம ஜனங்களுக்குச் சுயாட்சின்னா என்ன, சுதந்திரம்னா என்னன்னு கூடத் தெரியாது. அவனவனுக்கு அன்னன்னிக்கிக் கிடைக்கிற கஞ்சி உறுதியா இருந்தா போதும்."

"அது கூட உறுதி இல்லே போலி ருக்கே..."

"ஏன் இல்லே? பட்டி தொட்டிகளிலெல் லாம், மாட்டுக்குத் தனியா, மக்களுக்குத் தனியான்னு கஞ்சி வச்சு ஊத்தறது யாரு? எங்க தலைவர். இதைவிட உயர்ந்த பொருளாதாரத் திட்டம் வேற எங்கே இருக் குது? சரி.. அது கிடக்கட்டும், நம்ம விஷயத் துக்கு வருவோம். எப்போ இந்திர பிரஸ்தம் பொறப்படறீங்க!"

"நான் போய் கஜானாவைக் கண்டு பிடிக்கணும், இந்திர பிரஸ்தத்துத் தலைவர் முகத்திலே புன்னகையை வரவழைக்கணும், அவ்வளவு தானே?"

"அவ்வளவேதான்."

"ஏன் இந்தக் காரியத்துக்கு என்னைத் தேர்ந்தெடுத்தீங்க?"



கூட, இதிலே ஒரு அளவுக்கு மேலே போக அவனுடைய கருணையுள்ளம் இடம் கொடுக்காது. ஒரே ரௌத்ரம், பீபத்ஸம், பயானகம் என்று ஆகிவிட்டால் அதில் 'ரஸம்' என்று சொல்லும்படி என்ன இருக்கும்? விரஸம்தான் இருக்கும். ஆகையினால் அவன் பூர்வ யுகத்து மநுஷ்யர்களைப் போல இந்த யுகத்தில் அவ்வளவு தார்மிகர்களாகவும், தெய்வ சக்தியுள்ளவர்களாகவும் ஜனங்களை ஸ்ருஷ்டிக்காவிட்டாலும், அதர்மத்தில் அவர்களுக்கு உள்ளூர ஒரு ருசியைக் கொடுத்தே ஸ்ருஷ்டித்திருந்தாலும், அதிலேயே அவர்கள் முழுகி அழிந்துவிடும் கொலைக் கூத்தாக முடித்து விடமாட்டான். சறுக்கா மாலை விளையாட்டுப் போலச் சறுக்கும் வரை சறுக்கட்டும் என்று பார்த்துக் கொண்டிருந்தாலும், விழுந்து எலும்பை முறித்துக் கொள்ள விடாமல் தாங்கிக் கொள்வதற்கு வருவான், மஹான்களையும் அனுப்பி வைப்பான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

"தலைவர் இட்ட பணி... அவ்வளவுதான் எனக்குத் தெரியும்..."

"சரி.. இப்போதாவது தலைவரை நான் பார்க்கலாமா?"

நஞ்சுகண்டன் பதில் கூறாமல் புன்னகை செய்தான்.

"நீங்க தலைவரைத் தினசரி பார்க்கறீங்களா?"

மறுபடியும் புன்னகை.

"நான் தலைவரை நேரே சந்திச்சுப் பேசி அவர்கிட்டேயிருந்து உத்தரவு வாங்கிகிட்டுப் புறப்படறேன்" என்றாள் அபூர்வா ஓர் உறுதியான குரலில்.

"மன்னிக்கவும். இது நடக்கக் கூடிய காரியமல்ல..."

"ஏன்...?"

"இதுக்கு இப்பொ என்னாலே பதில் சொல்ல முடியாது. உரிய சமயத்திலே தலைவரை உங்களாலே நிச்சயமா பார்க்க முடியும். அது வரையிலும், தயவு செய்து நான் சொல்வதைக் கேளுங்க... நம்புங்க..."

அபூர்வா சிறிது நேரம் அவனையே உற்றுப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவன் முகம் சலனமற்றிருந்தது.

"நான் தேர்தல்லே நிக்கறது என்ன ஆச்சு?" என்று கேட்டாள் அபூர்வா.

"நீங்க நிக்கறீங்க. அதெ பத்திச் சந்தேகமே இல்லே.. இப்பொவே மக்கள் மனசிலே உங்களைப் பத்தி ஒரு 'இமேஜ்' உருவாயிடுச்சு... இதையும் சாதிச்சட்டீங்கன்னா, வானந்தான் எல்லை..." என்றான் நஞ்சுகண்டன்.

"எனக்கொரு சந்தேகம்...." அவள் மேலே தொடராமல் நிறுத்தினாள்.

"கேளுங்க..."

"எனக்கு எதற்காக இவ்வளவு விளம்பரம்? ஒரே தலைவர்ங்கிற ஆட்சி அமைப்பு இருக்கிற நாட்டிலே.. ஏதோ நெருடற மாதிரி இருக்குது...."

"எப்பொ புறப்படறீங்க? இந்திர பிரஸ்தத்துக்குத் தகவல் தெரிவிக்க எல்லா ஏற்பாடும் செஞ்சாவணும்..."

"இந்திரப் பிரஸ்தத்தைப் பத்தி எனக்கு ஒண்ணும் தெரியாது... 'திடுதிப்'னு புறப்பட்டுப் போ'ன்னு சொன்னா...? ஐடோன்ட் நோ..."

"சம்பந்தப்பட்ட புஸ்தகங்கள், விவரங்கள் எல்லாம் அனுப்பறேன். ஒரு வாரத்திலே புறப்பட்டா நல்லது."

"நான் ஒண்ணு உங்களைக் கேக்கலாமா?"

"கேளுங்க."

"என் ப்ரெஸ் மீட் முடிஞ்சு வீட்டுக்கு வந்தப்புறம் ஒரு குரல்– ஆணா பெண்ணான்னு தெரியலே, 'ஜஸ்ட் நியுட்ரல் வாய்ஸ்லே, நாடகம் நல்லாயிருந்தது'ன்னு டெலிஃபோன்லே சொன்ன மாதிரி இருந்தது. அந்தக் குரல் யாருடையது? 'நாடகம்'னு சொல்லுவானேன்? ஏதாவது உங்களுக்குத் தெரியுமா?"

"கேள்விகள் கேட்காமலிருந்தால், பொய்கள் சொல்ல வேண்டிய அவசியமிருக்காது" என்று சிரித்துக் கொண்டே சொல்லியவாறு எழுந்தான் நஞ்சுகண்டன்.

(தொடரும்)

# இருக்கிறோமா?

'**வா**ழ்க்கை' என்ற சொல்லைப் பலரும் பல காலமாகப் பயன்படுத்தி வருகிறார்கள். ஆனால் எத்தனை பேர் வாழ்கிறார்கள்? வாழ்க்கை என்றால் என்ன என்று எத்தனை பேர் புரிந்து வைத்திருக்கிறார்கள் என்பது கேள்விக்குரியது.

சமஸ்கிருதத்தில் 'வசி' என்று ஒரு சொல் உண்டு. 'வசிக்கிறேன்', 'வசிக்கிறார்' என்றெல்லாம் பயன்படுத்துகிறோம். வசிப்பது வேறு; இருப்பது வேறு.

யாராவது 'நான் ஜெயிலில் வசிக்கிறேன்' என்று சொல்லக் கேட்டதுண்டா?

"என்னை ஜெயிலில் வைத்திருக்கிறார்கள்" என்றுதான் சொல்லுவார்கள்.

வீட்டில் வசிக்கிறோம். ஜெயிலில் வைத்திருக்கிறார்கள் - இரண்டுக்கும் என்ன வித்தியாசம்? நாம் நம் விருப்பப்படி ஓர் இடத்தில் இருந்தால் வசிக்கிறோம். நம் விருப்பத்திற்கு மாறாக அடைத்து வைக்கப்பட்டிருந்தால் 'வைத்திருக்கிறார்கள்' என்று சொல்லலாம்.



ஜெயிலுக்கும் வீட்டுக்கும் என்ன வித்தியாசம்? அங்கும் கதவு உண்டு, இங்கும் கதவு உண்டு. தாழ்ப்பாள்தான் வித்தியாசம். வீட்டில் உட்பக்கம் தாழ்ப்பாள்; ஜெயிலில் வெளிப்பக்கம்!

வீட்டில் நாமாகக் கதவைச் சாத்துகிறோம். ஜெயிலில் அவர்களாகச் சாத்தி வைத்திருக்கிறார்கள்.

எனவே வசிப்பது என்பது நமது வசதிப்படி வாழ்வது. இருப்பது என்பது நமது விருப்பத்திற்கு விரோதமாக மற்றவர் கட்டுப்பாட்டில் இருப்பது.

உலகத்தில் இன்று 'வசிப்பவர்' குறைவு. இருப்பவர் அதிகம். தமது விருப்பப்படி தமது கட்டுப்பாட்டில் தம்மை வைத்திருப்பவர்கள் மிகக் குறைவு.

மற்றவரை அடக்கி ஆள வேண்டும் என்று பலர் ஆசைப்படுகிறார்கள். முட்டாள்கள், தங்களையே ஆள முடியாதவர்கள், தன் விருப்பப்படி தானே வாழாதவர்கள், மற்றவர்களை அடக்கி ஆள்வது எப்படி? நாம் நமது நிர்வாகத்தில் இருந்தால் வாழ்கிறோம். அல்லது வசிக்கிறோம். நமது நிர்வாகத்தில் நாம் இல்லாவிட்டால் - இருக்கிறோம்.

**கா**லை ஐந்து மணிக்கு எழுந்திருக்க நினைக்கிறோம். எழுந்தால் - வசிக்கிறோம். வாழ்கிறோம். எழுந்திருக்க முடியவில்லை என்றால் இருக்கிறோம் என்று பொருள்.

வயிற்றில் அமிலம் சுரப்பு அதிகமானதால் காப்பி வேண்டாம் என்று முடிவு செய்கிறோம். காலையில் மனைவி காப்பி வேண்டுமா என்றதும், புன்னகையுடன் வேண்டாம் என்றால் நாம் வாழுகிறோம். வசிக்கிறோம். 'இன்னிக்கு மட்டும் கொடு' என்றால் வசிக்கவில்லை. இருக்கிறோம். இருந்து தொலைக்கிறோம். இப்படி இருந்தால் நாளாக நாளாக நமக்கே நம்மைப் பிடிக்காது.

நாம் சொன்னபடி மற்றவர் கேட்கவில்லையென்று எரிச்சல் படுகிறோம். குற்றப் பத்திரிகை படிக்கிறோம். நாம் நினைத்தபடி நாமே நடக்கிறோமா? நம்மை எந்த இ.பி.கோ.வில் உள்ளே வைப்பது? நம்மை நாமே ஆளுகிறோமா? வாழுகிறோம். வசிக்கிறோம். நம்மை நாமே

## கனவு மெய்ப்படும் – 2

# வசிக்கிறோமா?

ஆள முடிய வில்லையென்றால் இருக்கிறோம். இருந்து தொலைக்கிறோம்! 'பொறிகளின் மீது தனி அரசாணை' என்று பாரதி பாடினான். நமது உத்தரவுக்கு நமது கண், காது, மூக்கு, வாய், உடம்பு கீழ்ப்படிகிறதா?

நமது பொறிபுலன்கள் நமது வசத்தில் இருந்தால் - வசிக்கிறோம். வாழ்க்கை இனிமையாக - நிறைவாக இருக்கும். நமது வசம் நாம் இல்லாத போது நாம் இருக்கிறோம். அடிமையாக இருக்கிறோம். அடிமை வாழ்வு எப்படி இனிக்கும்? எனவே நம்மை நாமே வசப்படுத்த வேண்டாமா? முடியுமா? முடியும்!

ரமணருக்கும் ராமகிருஷ்ணருக்கும் முடிந்தது நமக்கு மட்டும் முடியாதா? முடியும் - நிச்சயமாக முடியும்.

ஒரு வேடிக்கையான நிகழ்ச்சி சொல்கிறேன். டவுன் பஸ்ஸில் போக வேண்டிய ஒருவர் கையில் சில்லறை இல்லை. ஐம்பது ரூபாய் நோட்டு மட்டும்தான். சில்லறையில்லாமல் ஐம்பது ரூபாய் நோட்டைப் பஸ்ஸில் நீட்டினால் புல்லனுக்கே கோபம் வரும். ஐயாவுக்கு ஒரு யோசனை. பக்கத்தில் இருந்த பளபள ஓட்டலில் நுழைந்தார். 'இன்றைய ஸ்பெஷலை' நோட்டம் விட்டார். ஆஹா, கோதுமை அல்வா! வாங்கிச் சாப்பிட்டார். அருமை. பிறகு ஒரு வடை, காப்பி. பில்லும் சில்லறையும் கைமாறியது. பஸ்ஸுக்குச் சில்லறை பிரச்னை தீர்ந்தது என்று கவலை போனது.

ஒரு வாரம் கழித்து அதே வழியாக வருகிறார். கையில் சில்லறை நிறையவே இருந்தது. இருந்தாலும் ஷோகேஸில் இருந்த அல்வா அவரைப் பார்த்துக் கண்சிமிட்டியது. "நான் அல்வா - அல்லவா? நீ கொஞ்சம் உள்ள வா!" என்று அழைப்பு விட்டது. சம்பாதித்து என்ன கண்டோம்! அல்வாவாவது சாப்பிடுவோம்' என்று முடிவு செய்தார். அதன் பிறகு எப்போது அந்த வழியாகப் போனாலும் அல்வா அவருக்கு ஆசைகாட்டியது.

அந்த அல்வாவுக்கு ஒரு விசேஷம். நாளாக நாளாக நன்றாக இருப்பது அதன் ஸ்பெஷாலிட்டி. கொஞ்ச நாள் போனதும் நண்பர்களிடம் அவர் பெருமையாகச் சொல்லிக் கொண்டார். 'எப்ப இந்தப் பக்கம் போனாலும் அல்வா சாப்பிடாமல் நான் போனதே இல்லை!'

தமது பலவீனத்தைப் பெருமை போலப் பேச ஆரம்பித்தார்.

திரு. கி.வா.ஜ. சொல்வார் : "முதல் நாள் அல்வாவை அவன் விழுங்கினான். அடுத்த நாள் முதல் அல்வா அவனை விழுங்க ஆரம்பித்தது!"

நான் அல்வா என்று நாசுக்காகச் சொன்னேன். ஒவ்வொருவருக்கு ஒவ்வொரு வயதில் ஒவ்வொரு பொருள் அல்வா போல் ஆட்டி வைக்கிறது.

ஆசை நமக்குள் கட்டுப்பட்டிருந்தால் குற்றம் இல்லை. ஆசை இல்லாமல் இருக்கவே முடியாது. ஆனால் ஆசைக்குள் முழுமையாக நாம் சிக்கிக் கொண்டால் யாராலுமே நம்மைக் காப்பாற்ற முடியாது.

பகவான் இராமகிருஷ்ணர் இதைத்தான் அவர் பாஷையில் சொன்னார். 'படகு தண்ணீருக்குள் இருந்தால் ஆபத்து இல்லை. படகுக்குள்

சுகி சிவம்

தண்ணீர் புகுந்து விட்டால் ஆபத்து தவிர வேறு எதுவும் இல்லை.'

இரண்டாவது இராமகிருஷ்ணராக நம் முடன் வாழ்ந்த திருமுருக கிருபானந்தவாரி யார் அவர்கள் இன்னும் நன்றாக விளக்கு வார். "நாம காரிலே ஏறலாம்; கார் நம்ம மேலே ஏறக் கூடாது. 'தம்பி, 12B பஸ்ஸிலே நீ ஏறினா தேனாம்பேட்டை போகலாம். 12B உன் மேலே ஏறினா கிருஷ்ணாம்பேட்டை (சுடுகாடு) போவாய்' என்பார்.

எனவே ஆசை நமக்குள் அடக்கமாக இருந் தால் நாம் வசிக்கிறோம்; ஆசைக்குள் நாம் அடக்கமானால் சவ அடக்கம் போலத்தான். காப்பாற்றுவது கடினம். நம்முடைய பொறி களும், புலன்களும் நாம் சொல்வதை அப்ப டியே கேட்க வேண்டும். மனது நம் வசப்பட வேண்டும்.

மீன் எதனால் அழிகிறது? தூண்டில் புழு வுக்கு ஆசைப்பட்டு, வாயைத் திறந்து, புழு வைச் சாப்பிடுகிறது. மரணம் மீனைச் சாப் பிடுகிறது! வண்டு எதனால் அழிகிறது? நாசி யின் நறுமணத்தால் பூவில் மயங்கிக் கிடக் கிறது. பூவோ கருவுற்று, காயாகும் நோக்கில் இதழ்களை மூடிவிடுகிறது. மூங்கிலைத் துளைக் கும் வலிய வண்டு, நாசியின் நறுமணச் சுவை யில் மயங்கி மெல்லிய பூவைக் கூடத் துளைக்க முடியாமல் உள்ளேயே கிடக்கிறது. சாகிறது.

அசுணமா என்றொரு பறவை. நல்ல இசை என்றால் அதற்கு நாட்டம் மிக அதிகம். வேடு வர்கள் புல்லாங்குழல் எடுத்து வாசிக்கும் போது, இசைக்கு மயங்கி அவர்கள் தலைமீது வட்டம் இடும். வேடுவர்கள் உடனே கீழே நெருப்பை மூட்டி, பறை என்ற தோல் கருவி யை எடுத்து தாறுமாறாகத் தட்டியதும் துடி துடித்து அது கீழே விழுகிறது. நெருப்பில் விழுந்ததும் அது வேடுவர்க்கு உணவாகி விடு கிறது! காது அதன் அழிவுக்குக் காரணம்!

விட்டில்பூச்சி ஏன் அழிகிறது? கண்தான் காரணம்! நெருப்பைப் பார்த்தால் - தள்ளி நின்று பார்த்தால் போதாதா? இன்னும் நெருக்க மாக - நெருக்கமாக என்று அருகில் போன தும் விட்டில் அழிகிறது. கண்ணால் அழி கிறது விட்டில்பூச்சி.

யானைக்கு அழிவு எதனாலே? யானை பிடிப்பவர்கள் எப்படிப் பிடிக்கிறார்கள்? காட்டிலே பழக்கிய பெண் யானையைத் தொலைவில் நிறுத்துவார்கள். அதன் அரு கில் பள்ளம் வெட்டி இலை தழைகளைப் போட்டு லேசாக மூடி வைப்பார்கள். காட் டில் அலையும் ஆண் யானை, மெய் இன்பம் என்ற உடல்சுகம் கருதி பெண் யானையை நோக்கி வரும். வழியில் பள்ளத்தில் விழுந்து மனிதர்களிடம் மாட்டிக் கொள்ளும்! வாழ் நாள் முழுவதும் காட்டில் மரம் இழுத்து மனிதன் இடும் பணிகளைச் செய்து, பாரம் சுமந்து, அவர்கள் தருகின்ற குறைந்த உணவை உண்டு, துன்பம் அடையும். யானைக்கு இன்னல் எதனாலே? மெய் என்ற சரீர ஆசை தான் காரணம்!

கண்ணாலே விட்டில் அழியும் - காதாலே அசுணமா அழியும்; நாசியால் வண்டு, வாயாலே மீன், மெய்யாலே யானை! இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொறியாலே அழியும். மனிதனோ ஐந்தாலும் அழிகின்ற வாய்ப்பு உடையவன். எனவே எச்சரிக்கை எவ்வளவு தேவை?

'ஓரவொட்டார் ஒன்றை உன்னவொட் டார் மலரிட்டு உனதுதாள் சேரவொட்டார் ஐவர்' என்று ஐவரைக் குறைசொல்லுகிறார் அருணகிரிநாதர். இந்த ஐவரை நாம் அடக்கி ஆண்டால் நாம் வசிக்கிறோம். அவர்கட்கு அடங்கி நடந்தால் நாம் இருக்கிறோம்!

ஐவரை அடக்க வழி வேண்டுமா? யோகம் பயிலுவோம் வாருங்கள்! முறை யான குருமூலம் யோகாசனம் பயின்று பிராணாயாமம் செய்து வருவோம்!

'வாசி' என்றால் காற்று - அதைத் திருப்பி னால் 'சிவா'. காற்று வெளியேறுவதால் அழிவு - உள்முகம் திரும்பி நிறுத்தினால் விருத்தி. காற்று 'வாசி', திரும்பினால் 'சிவா' - 'நீண்ட வாழ்வு!

இந்த யோகம் எப்படிச் செய்வது? கவலை வேண்டாம்! நல்ல குருவைத் தேடிச் சென்று கற்றுக் கொள்ளுவோம்! கிடைக்க வில்லையா? தெய்வீக வாழ்க்கைச் சங்கத் தைத் தோற்றுவித்த சுவாமி சிவானந்தர் யோகம் செய்யும் வழிமுறைகளை விளக்கி இருக்கிறார். அதனைப் பயின்று செய்யலாம். ஆனால் குருவழி வித்தை வருவதே உத்தமம். புத்தகம் இரண்டாம்பட்சமே.

தூய வஸ்திரத்தின் மீதமர்ந்து, நாசி நுனியை நோக்கியபடி, உடலை நேராக வைத்து, மூச்சுக் காற்றை ஒழுங்குடன் நிலை நிறுத்தும் யோகத்தை பகவத்கீதையும் விளக்கு கிறது. அதனைப் பின்பற்றுவது வெற்றியின் முதல்படி. சொன்னதைக் கேட்கும் உடம்பை, வாழ்க்கையின் மிகப் பெரிய தேவையை யோகம் நமக்குத் தருகிறது.

திருமந்திரம், கீதை வற்புறுத்தும் யோகா சனம் வாழ்க்கையை வெற்றிகாண விரும்பும் ஒவ்வொருவரும் தெரிந்திருக்க வேண்டிய முதல் வித்தை.

சோம்பல் - உயிருடன் இருக்கும்போதே செத்துப் போகும் வழிமுறை. அதனைத் தூக்கி எறிவோம். காலையில் எத்தனை மணிக்கு எழுகிறோமோ - எழவேண்டும் என்று நினைக்கிறோமோ - அந்த நேரத் துக்கே எழுந்திருப்போம்! வாழ்க்கையை ஜெயிக்க, யோகம் பயில்வோம், வாருங்கள்! இருப்பது நமது வேலையல்ல; நாம் வாழப் பிறந்தவர்கள்! வசிப்போம்! வாழ்வோம், வாருங்கள்!

# கோட்டைக்குள்ளே எலி இருந்தால்...

பொன்னையா :
வாழ்க்கை விலை ஏறிப்போச்சு,
வயித்துப்பசி மீறிப்போச்சு,
கேட்கக் கொஞ்சம் கேள்விவேணும்
கேனய்யா! - உழைச்சி
கேள்விக் குறியைப் போல் வளைஞ்ச
சின்னையா!

சின்னையா :
மாட்டைப் பாரு கண்ணைப்பாரு,
மல்லுக்கட்டும் நெலமை பாரு,
நீட்டிப் போட்ட நாக்கெதற்கு
வம்(பு)ஐயா - நீயும்
நேத்தைப்போல காலந்தள்ளு
பொன்னையா!

பொன்னையா :
நித்தம் நித்தம் ஒளிகொடுத்து
நிலவைப் போல தேய்ஞ்சிப்புட்டோம்!
மொத்தநாளும் உண்ணாவிரதம்
சின்னையா-அட,
மூச்சுவிடவும் பயந்தவாழ்க்கை
ஏனையா?

சின்னையா :
'ஏட்'டைப் போல கேள்விகேட்டு
என்னநீயும் பண்ணப் போறே?
ஓட்டுவாங்கிப் போனவங்க உண்மையா
- ஆரும்
ஊர்திரும்ப அஞ்சுவருஷம்
பொன்னையா!

பொன்னையா :
லட்டுக்குள்ளே மூக்குத்தியும்
லவுக்கையோடு புடவையொண்ணும்
'வெட்டிப்புட்டா' ஓட்டுப்போடும்
சின்னையா - நீ
வெத்தலைக்கு வாழ்வை விற்ப(து)
என்னையா?

சின்னையா :
தெருமுழுக்க எல்லாருமே
திண்ணை தேடித் தூங்குறாங்க!
இருவர் நினைச்சி என்ன ஆகும்
பொன்னையா? - தெரிஞ்சா
'ஏட்டு' வந்து கொன்னுடுவான்
போங்கையா!

பொன்னையா :
கோட்டைக்குள்ளே எலிஇருந்தா
வீட்டுக்குள்ளே ஓட்டைவிழும்!
நாட்டுக்குள்ளே எல்லாருக்கும்
சொல்ஐயா - நாம
வாழ்வதென்ன திறந்த ஜெயிலுக்
குள்ளேயா?

சின்னையா :
பூட்டைநீயும் திறந்துப் புட்டே
புலியின் பாலைக் கறந்துப்புட்டே
வேட்டி மடிக்க வேளைவந்தது
பொன்னையா - இனியும்
வீடும் நாமும் வேறென்பது
பொய்ஐயா.

- நா. வே. அருள்



# அம்மா பு




முதல்வருக்காக, தமிழக அரசு தனி விமானம் வாங்குகிற
— செய்தி.




—மதி...





# க்கிறார், பராக்!






• காட்சிக்கு... கடத்தல் தங்கங்கள்!

# AIR CUSTOMS



**மன்மோகன் சிங்கின் புதிய பொருளாதாரக் கொள்கையின்படி, வெளிநாட்டிலிருந்து தங்கம் கொண்டு வருவதற்கு இருந்த கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டு விட்ட நிலையிலும், தங்கக் கடத்தல், வழக்கம் போல் கனஜோராகவே நடைபெற்று வருகிறது. சமீபத்திய தினசரிச் செய்தி ஒன்று, விமான 'பைலட் கேபினு'க்குள்ளேயே தங்கம் கடத்தி வரப்பட்டதாகச் சொல்கிறது.**

**தங்க இறக்குமதி பெரிய சிக்கலான காரியம் இல்லை (இப்போது) என்ற நிலையிலும், கஸ்டம்ஸ் பரிசோதனை மிகத் தீவிரமாக இருக்கிற நிலையிலும் இப்படியான கடத்தல்கள் ஏன் நடைபெறுகின்றன? எப்படி நடைபெறுகின்றன? - அலசுகிறது கட்டுரை.**

# சட்டத் தளர்த்தலும் தங்கக் கடத்தலும்!

இரண்டாண்டுகளுக்கு முன் கொண்டு வரப்பட்ட சட்டசீர்திருத்தப்படி வெளிநாடுகளிலிருந்து தங்கத்தை இந்தியாவுக்குக் கொண்டு வரலாம். ஆனால் இரண்டு நிபந்தனைகள். அப்படிக் கொண்டு வருபவர் ஆறு மாதங்களாவது அந்த வெளிநாட்டில் தங்கியிருந்திருக்க வேண்டும் - அப்போது (குறிப்பிட்ட சுங்கவரியைச் செலுத்தி விட்டு) ஐந்து கிலோ தங்கம் வரை கொண்டு வரலாம். அதற்கான சுங்கவரியை வெளிநாட்டு கரன்ஸி மூலமாகவே செலுத்த வேண்டும். அக்டோபர் 1992வில் இப்படி விதிகள் தளர்த்தப்பட்ட போது கூட 10 கிராம் தங்கத்திற்கு 450 ரூபாய் என்கிற அளவில் இருந்த வரி வீதம், இப்போது 220 ரூபாயாகக் குறைக்கப்பட்டுள்ளது.

"இப்படி வெளிநாடுகளிலிருந்து வரும் நபர்கள் கொண்டு வரும் தங்கத்தை நகை வியாபாரிகள் வாங்குவது சகஜம். தவிர விற்கப்படும் பழைய நகைகளிலிருந்தும் கொஞ்சம் தங்கம் கிடைக்கும். மேலும் பம்பாயிலுள்ள புல்லியன் மார்க்கெட்டில் சென்று அன்றைய மார்க்கெட் ரேட்டுக்கு தங்கத்தை வாங்கி வந்து நகைகளைச் செய்து விற்கலாம். நகை வியாபாரிதான் என்றில்லை; யார் வேண்டுமானாலும் இதைச் செய்யலாம்" என்கிறார் வசந்தலால் மேத்தா. இவர் சென்னை தங்க மற்றும் வைர வியாபாரிகள் சங்கத்தின் தலைவர். தங்கக் கட்டுப்பாட்டுச் சட்டம் தளர்த்தப்பட்ட பிறகுதான் தங்கக் கடத்தல் பெருமளவு குறைந்தது என்ற உண்மையை அடிக்கோடிட்டுக் காட்டுகிறார்.

"சர்வதேசத் தங்க விலையும், இந்தியாவில் தங்கத்தின் விலையும் கிட்டத்தட்ட ஒன்றுதான் என்பதால் இன்று தங்கக் கடத்தலுக்குக் கவர்ச்சி குறைந்து விட்டது. என்றாலும் சுங்கவரியை மிச்சம் பிடித்தால் லாபம் தானே என்ற எண்ணத்திலும், அனுமதிக்கப்பட்ட அளவை விட சற்று அதிகம் கொண்டு வரலாமே என்ற நோக்கத்திலும் தங்கக் கடத்தல் அவ்வப்போது நடக்கிறது. துபாய், சிங்கப்பூர், ஹாங்காங் ஆகிய நாடுகளிலிருந்து தான் இங்கு தங்கம் கடத்தப்படுகிறது. லண்டன், அமெரிக்கா போன்ற இடங்களிலிருந்து

கடத்தல் செய்வது லாபமில்லை என்பதால் அங்கிருந்து நம் நாட்டுக்குத் தங்கம் கடத்தப் படுவதில்லை" என்கிறார் இவர்.

ஸ்விட்சர்லாந்து நாட்டுத் தங்கக் கட்டிகள் "க்ரெடிட்ஸ்விஸ்" என்றும், லண்டனில் உருவாக்கப்படும் தங்கக் கட்டிகள் "ஜான் மேத்தி" என்றும் முத்திரையிடப்படுகின்றன. பொதுவாக நம் நாட்டுத் தங்கக் கட்டிகளை விட மேற்கூறிய தங்கக் கட்டிகள் தரமானவை. ஏனென்றால் அவை 24 காரட் தங்கமென்றால் நம்முடையவை 22 காரட்தான். "24 காரட் தங்கத்தைத் தயாரிக்குமளவுக்கு நம் நாட்டுக் கருவிகள் உயர்ந்த தொழில்நுட்பத்தைக் கொள்ளவில்லை" என்று உச்சநீதி மன்றமே ஒரு வழக்கில் கருத்து கூறியிருக்கிறது.

சர்வதேச அளவில் டன், தோலா ஆகிய அளவுகளில்தான் தங்கம் நிறுக்கப்படுகிறது. ஒரு தோலா என்பது 16 கிராம். 116 தோலா கொண்டது ஒரு பிஸ்கெட். இவ்வளவு எடை கொண்ட ஒரு தங்க பிஸ்கெட் ஒரு க்ளுக் கோஸ் பிஸ் கெட்டின் அளவில்தான் இருக்கும் (தங்க பிஸ்கெட்டுகள் நிரம்பிய சூட்கேஸை கதாநாயகன் மற்றும் வில்லன் தரப்பினர் மாறி மாறி தூக்கிப் போட்டுப் பந்தாடுவது சினிமாக்களில்தான் நடக்க முடியும்).

விமான நிலையங்களில் உள்ள 'மெட்டல் டிடெக்டர்', தங்க பிஸ்கெட் கடத்தலைக் கண்டுபிடிக்கப் பெரிதும் உதவுவதாகச் சொல்ல முடியாது. 'ஹைஜாக்கிங்' செய்வதைத் தடுக்க, துப்பாக்கி போன்றவை இருப்பதைக் கண்டு பிடிப்பதுதான் அந்தக் கருவியின் முக்கிய வேலை.

சரி, எப்படிக் கடத்துகிறார்கள்?

● முக்கியமாகப் பயன்படுத்தப்படுபவை ஷூக்கள்தான். மறைப்பதற்கென்றே செய்யப்படும் 'மேட்-டு-ஆர்டர்' மாடல்கள்! காப்ஸ்யூல்களில் வைத்து விழுங்குவது தங்கத்தைப் பொறுத்தவரை (அதன் எடை காரணமாக) அதிகம் நடப்பதில்லை. ஆனால் ஆசனவாயில் வைத்துக் கடத்தல் செய்வது சகஜம்.

● பெண்களைப் பொறுத்தவரை சாவி-வளையம், பெரும் வெற்றிடங்களைக் கொண்ட வளையங்கள் ஆகியவற்றின் உள்ளே வைத்துக் கடத்துவது உண்டு.

● ஆறு மாதம் வெளிநாட்டில் தங்கி விட்டு வருபவர் நூறு கிலோ கிராம் வெள்ளியையும் கொண்டு வர அனுமதி உண்டு. அதைப் பயன்படுத்திக் கொண்டு தங்கத்திற்கு வெள்ளி முலாம் பூசியும் கொண்டு வருவதுண்டு!

● விமானத்தின் மூலம் கடத்துவதை விட, தரை மூலம் கடத்துவது சிரமக் குறைவானது. ஐந்து ஆண்டுகளுக்கு முன் ஒரே சமயத்தில் இரண்டாயிரம் தங்க பிஸ் கெட்டுகள் பிடிபட்டது நினைவிருக்கலாம்.

● விமானத்தின் டாய்லெட்டில் தங்கத்தை மறைத்து விட்டு, ஜாம் ஜாமென்று கடத்தியவர் வெளியே நடக்க, பிறகு டாய்லெட்டை சுத்தம் செய்பவர் அந்தத் தங் கத்தை மறைத்து எடுத்து வந்து அவரிடம் வெளியே கொடுத்த சம்பவங்கள் உண்டு. விமான நிலைய வாயிலில் போலீஸ் காரரே கடத்தல் தங்கத்தை வாங்கிக்



• [illegible] மேத்தா

• கல்யாணம்





• இப்படித்தான் கடத்துகிறார்கள்!

கொண்டு பிறகு அதை எடுத்துக் கொண்டு போய் விமானத்தில் கொடுத்ததாக 'வரலாறு' சொல்கிறது. இப்படி வேலியே பயிரை மேய்ந்த சம்பவங்களுக்கும் பஞ்சமில்லை.

கடத்துபவர்களைக் கண்டுபிடிக்க ''ரெவின்யூ இன்டெலிஜென்ஸ்'' என்ற பிரிவே இருக்கிறது. இதுவும் சுங்கத் துறையின் ஒரு பகுதிதான். இவர்களுக்கு கடத்தலைப் பற்றித் தகவல் கொடுக்க இன்ஃபார்மர்கள் உண்டு. தவிர, யார் வேண்டுமானாலும் கடத்தலைப் பற்றிய தகவலை அறிந்தால் இவர்களுக்கு அறிவிக்கலாம். அப்படிப் பிடிபட்ட பொருளில் ஐந்தில் ஒரு பங்கு மதிப்புள்ள பணம் தகவல் கொடுப்பவருக்கு வெகுமதியாக வழங்கப்படும். அதே சமயம் அவரைப் பற்றிய விவரங்கள் வெகு ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.

இந்தியன் ஏர்லைன்ஸில் விமான ஓட்டியாகப் பணிபுரியும் கேப்டன் சிவராமகிருஷ்ணன் இந்திய விமான ஓட்டிகள் கூட்டமைப்பின் உதவி செயலாளரும் கூட. வெகு திறமையாகச் செயல்படுவதாக சுங்கத் துறையை இவர் பாராட்டுகிறார். சில குறிப்பிட்ட கும்பலைச் சேர்ந்தவர்கள் கடத்தும் எண்ணத்துடன் துபாய் போன்ற இடங்களில் தங்கத்தை வாங்கும்போதே அதை உடனுக்குடன் அறிந்து கொண்டு நடவடிக்கைக்குத் தயாராகும் அளவுக்கு நம் நாட்டு சுங்கத் துறையினருக்கு நெட்வொர்க் இருக்கிறது என்கிறார்.

"சிங்கப்பூரிலிருந்து ஒரு பயணி இந்தியன் ஏர்லைன்ஸ் விமானத்தில் டெல்லிக்கு வருகிறார் என்று வைத்துக் கொள்வோம். அந்தப் பயணி, தான் கடத்தி வந்த தங்கத்தை அந்த விமானத்திலேயே மறைவிடத்தில் வைத்து விட்டு வெளியே சுதந்திரமாகச் சென்று விடுவார். பிறகு அதே விமானம் டெல்லியிலிருந்து சென்னைக்கு வரும் போது அதில் பயணியாக ஏறி, தங்கத்தோடு வெளியேறுவார். இது, உள்நாட்டு சர்வீஸ் என்பதால் சோதனை அவ்வளவாக இருக்காதல்லவா?

"பயணிகள் யாராவது கடத்தல் செய்து பிடிபட்டாலோ, ஏதாவது கேபினெட்டில் தங்கம் கடத்தப்படுவதாகத் தகவல் வந்தாலோ அந்தக் குறிப்பிட்ட விமானியின் பாடு திண்டாட்டம்தான். இரண்டு மூன்று மணி நேரமாவது உட்கார வைத்து "சந்தேகத்துக்குரிய விதத்தில் ஏதாவது நடந்ததா? இந்தக் கடத்தலைப் பற்றி உங்களுக்கு முன்னமேயே ஏதாவது தகவல் கிடைத்ததா? என்று கேள்விகளைக் கேட்டுத் திணற வைப்பார்கள் சுங்கத் துறையினர். இதனால் எரிச்சல் ஏற்படுவது இயற்கைதானே" என்று கேட்கிறார் சிவராமகிருஷ்ணன்.

"நாட்டின் மொத்த வரிகளில் சுமார் 75 சதவீதத்தைப் பெற்றுத் தருவது தீர்வை மற்றும் சுங்க வரிகள்தான். இந்த நிலையில் இவை தொடர்பான வழக்குகளை விசாரிக்க மேல் விண்ணப்ப 'ட்ரிப்யூனல்' ஒன்று உருவானது. இந்த ட்ரிப்யூனலின் தீர்ப்பின் மீது அப்பீல் செய்ய வேண்டுமானால் உச்சநீதிமன்றத்தைத்தான் நாட வேண்டும்.

இந்த ட்ரிப்யூனல் உருவான 1982ம் ஆண்டிலிருந்தே இதில் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட எஸ். கல்யாணம் இப்போது இதன் தலைமை நீதிபதி. கர்நாடகா, ஆந்திரப்பிரதேசம், தமிழ்நாடு, கேரளா, லட்சத்தீவு ஆகிய பகுதிகளைச் சேர்ந்த மேல் வழக்குகள் இங்கு தீர்ப்புக்கு வருகின்றன.

"இப்போது தங்கக் கடத்தல் சுதந்திரப் பொருளாதாரக் கொள்கையினால் மிகவும் குறைந்து விட்டது. என்றாலும் சுங்கவரி கட்டுவதிலிருந்து தப்பிக்க எண்ணி சிலர் கடத்தலில் இன்னமும் ஈடுபடுகிறார்கள். இதற்காகப் பல குறுக்கு வழிகளில் இறங்குகிறார்கள். வெளிநாட்டில் ஆறு மாதங்கள் தங்கி வருபவர்கள் ஐந்து கிலோ தங்கம் கொண்டு வரலாமில்லையா? அதற்கான சுங்கவரி ரசீதை வைத்துக் கொண்டு அடுத்தடுத்துக் கொண்டு வரப்படும் தங்கத்துக்கு வரி கட்டியதாகக் காட்டி ஏமாற்ற முயற்சிப்பது உண்டு. ஆனால் ரசீதில் "ஜான்மேத்தி தங்கம்' என்றிருக்கும்; கட்டிகளிலோ "ஸ்விஸ்க்ரெடிட்" என்று பொறித்திருக்கும். இதுபோன்ற பொறிகளில் கடத்தல்காரர்கள் சிக்கிக் கொள்வதுண்டு. தங்கத்தை இறக்குமதி செய்து, தங்க நகையாக அதைச் செய்து ஏற்றுமதி செய்யும் வியாபாரிகளுக்கு சுங்க வரியில் தள்ளுபடி உண்டு. இதைத் தவறாகப் பயன்படுத்தி முழு சுங்கவரியிலிருந்து தப்ப முயற்சிப்பவர்கள் உண்டு.

"நம் சுங்கத்துறை மிகத் திறமையானது. கடத்தலைக் கண்டுபிடிக்கும் ஊழியர்களுக்கு வெகுமதி அளிக்கும் திட்டமும் கடந்த மூன்றாண்டுகளாகச் செயல்பட்டு வருகிறது. மூன்று ஆண்டுகளுக்கு முன் 'சாம்ராட் அசோக்' என்ற கப்பலில் கோடிக்கணக்கான கடத்தல் பொருள்களைக் கைப்பற்றினர் சுங்க அதிகாரிகள். கப்பலின் கேப்டனும் குற்றவாளியே என்று தீர்ப்பு வழங்கினேன்.

"ஆனால் ஒன்று. கடத்தல் செய்யும் 'அம்புகளைப்' பிடித்தாலும், அவற்றை எய்பவனைச் சிக்க வைப்பது மிகக் கஷ்டமான விஷயம். காரணம், சிக்குபவர்களுக்கே தெரியாது, தங்களை இந்தக் காரியத்தை செய்ய வைத்த மேலிடம் எது என்பது. அந்த அளவு இடைத்தரகர்கள் சங்கிலி போல் வரிசையாக இருப்பார்கள்" என்கிறார் கல்யாணம்.

- அருண் சரண்யா

# மேத்தா ஒப்புக்கொள்ளும் உண்மை...

## *மாறாத சிறப்பு - வைரங்களுக்கு,*
## *மாறுகின்ற தன்மை - நாகரிகத்திற்கு !*



உங்களுடைய பழங்கால வைர நகைகள்
சலிப்பூட்டுகின்றனவா ?
அந்த நிலையை மாற்றுங்கள். மேத்தா ஜுவல்லரி
ஷோ ரூமுக்கு வாருங்கள்.
வைரங்கள் என்றாலே பாபாலால் என்று
அதற்குச் சிறந்த பெயரையும் புகழையும்
தேடித் தந்த அதே குழுவினர் -
**சுரேந்திரா, துஷார், நரேஷ் மற்றும் அபய் -**
இவர்கள் உங்களுடைய பழைய வைர
நகைகளை, உங்கள் விருப்பத்திற்கு ஏற்றவாறு
புதிய டிசைன்களில் மாற்றி அமைத்துக்
கொடுப்பார்கள். நேர்த்தியான வேலைப்பாட்டுக்கும்
துல்லியத்திற்கும் பெயர் பெற்ற மேத்தா
கைவண்ணத்தைக் காணுங்கள். உங்கள் நகைகள்
புதிதாய் மாற, இன்றே வாருங்கள். உங்கள்
வைரங்கள் புத்தொளி வீசிப் புதிது போல்
பிரகாசிக்கட்டும்!

**Mehta**
JEWELLERY

40, திருமலைப் பிள்ளை ரோடு,
தி. நகர், சென்னை-600 017.
தொலைபேசி : 828 3130

நேரம்: காலை 10.00 முதல் பிற்பகல் 1.30 வரை பிற்பகல் 2.30 முதல் 7.00 வரை

ARTIG/1541

# மணிக் கொடி

நாட்கள் கடந்து கொண்டிருந்தன. நரேந்திரநாத் பானர்ஜியிடமிருந்து எந்தத் தகவலும் வரவில்லை. அருணாசலம் பற்றியும் தகவல் ஏதுமில்லை. ராஜாராமன், அவன் சவுக்கியமாக இருப்பதாய்த் தம் லண்டன் நண்பர் ஒருவர் மூலம் தகவல் சொல்லி யனுப்பியதாக மனைவியிடம் அவ்வப்போது பொய் சொல்லி வந்தார்.

அஞ்சனா, காங்கிரஸ் இயக்கத்தில் ராமசாமியுடனும் அவருடைய கூட்டாளிகளுடனும் முழுமூச்சுடன் ஈடுபட்டுக் கூட்டங்களுக்குப் போவது, துண்டுப்பிரகரங்கள் விநியோகிப்பது, பெண்களை அவர்கள் வீடுகளில் சந்தித்துக் காங்கிரஸ் இயக்கம் பற்றி விளக்குவது போன்ற அலுவல்களைச் செய்து வந்தாள்.

அவ்வாண்டின் இறுதியில் வழக்கம் போல் காங்கிரஸ் மாநாடு நடைபெற்றது. அலாகாபாத்தில் நான்கு நாட்கள் நடைபெற்ற அம் மகாநாட்டுக்கு சர் வில்லியம் வெட்டர்பர்ன் எனும் ஆங்கிலேயர் தலைமை தாங்கினார். இந்தியாவில் சுதந்திரத்துக்காகக் குரல் கொடுத்துப் போராடிய சில நல்ல ஆங்கிலேயர்களில் இவர் ஒருவர். அப்போது வைசிராயாக இருந்த மிண்டோவும் இங்கிலாந்து மந்திரி மார்லியும் இந்தியாவுக்காகச் சில 'சீர்திருத்தங்'களை அறிவித்திருந்தனர். இவற்றில் ஒன்று முஸ்லிம்களுக்குத் தனித் தொகுதிகள் தேர்தலின் பொருட்டு நிர்ணயிக்கப்படும் என்பது. இந்துக்களையும் முஸ்லிம்களையும் பிரித்த இந்த ஏற்பாடு இருசாராரையும் முகம் சுழிக்க வைத்தது. இம் மாநாட்டில் பலரின் கண்டனத்துக்கும் இது உள்ளாயிற்று. முஸ்லிம் லீகின் தலைவர் முகம்மது அலி ஜின்னாவே இதனை எதிர்த்தார். இந்துக்களும் முஸ்லிம்களும் எக்காரணங்கொண்டும் பிளவுபடாதிருக்க வேண்டும் என்று பல தலைவர்களும் வற்புறுத்தினார்கள். 'மயிலே மயிலே இறகு போடு' என்று வெள்ளைக்காரனிடம் ஆண்டுதோறும் கெஞ்சுகிற முறையில் வெற்றுத் தீர்மானங்களைப் போட்டுக் கொண்டிருப்பது எந்த முன்னேற்றத்தையும் ஏற்படுத்தப் போவதில்லை என்பது தீவிரவாதிகளின் கருத்தாகத் தொடர்ந்து இருந்து வந்தது. நாடுதழுவிய இயக்கமாய்க் காங்கிரஸ் கட்சி வளர்ந்து விட்டது, வெள்ளைக்காரனின் வயிற்றில் புளியைக் கரைத்ததென்னமோ உண்மை. அவன் இந்துக்களையும் முஸ்லிம்களையும் பிரிக்கச் சூழ்ச்சி செய்ததும், முஸ்லிம்களுக்கு அதிகச் சலுகைகள் கொடுப்பதன் மூலம் இந்துக்களின் கோபத்தைக் கிளற முயன்றதுமே இதற்குச் சான்றுகள். முஸ்லிம்களுக்கு அதிகமான தொகுதிகள் உள்ளாட்சித் துறைகளில் தரப்படும் என்பதும் மிண்டோ-மார்லி சீர்திருத்தங்களில் ஒன்றாக இருந்தது. இதனால் எல்லாம் நாடு தழுவிய அதிருப்தி, வெள்ளைக்காரர்கள் மீது இந்தியர்க்கு ஏற்பட்டிருந்தது.

அவ்வாண்டின் இறுதியில் நரேந்திரநாத் பானர்ஜியிடமிருந்து ராஜாராமனுக்கு ஒரு கடிதம் வந்தது. எந்த ஊரிலிருந்து அவன் அக் கடிதத்தை எழுதினான் என்பதற்கு அவன் எந்தத் தடயமும் அதில் கொடுக்கவில்லை. தபால் முத்திரையும் தெளிவற்று இருந்ததால் அவனது இருப்பிடம் ஊகிக்கும் படியாகவும் இல்லை. தனது பெயரையும் அவன் அதில் குறிப்பிடவில்லை. தனது பெயராலோ கையெழுத்தாலோ அவருக்குத் தொல்லை விளையக்கூடாது என்பதில் அவனுக்கு இருந்த அக்கறை அவர் கண்களை மல்கச் செய்தது.

'அன்புள்ள அய்யா,

உங்கள் வளர்ப்பு மகனுக்கு ஒப்பானவன் எழுதும் கடிதம் இது. என்னை மறந்திருக்க மாட்டீர்கள் என்பதை நன்கு அறிவேன். நான் நலமாக இருக்கிறேன். தங்கள் மகன் பற்றிய தகவல் ஏதும் எனக்கு என் அண்ணன் மூலம் கிடைக்கவில்லை. கிடைத்ததும் தெரிவிப்பேன்.

இவ்வாண்டு ஜூலை மாதம் முதல் தேதியன்று இந்தியாவுக்குக் கொண்டு வந்து விசாரணை நடத்துவதற்காகக் கப்பலில் ஏற்றப்பட்ட விநாயக தாமோதர் சர்வர்க்கர் பற்றிய முழுச் செய்தியையும் தாங்கள் அறிவீர்களா? அறியவில்லையாயின் நான் கொடுக்கும் தகவல்கள் தங்களுக்குச் சுவையாக இருக்கும். கப்பல், ப்ரான்ஸ் நாட்டைச் சேர்ந்த மார்சேல்ஸ் அருகே நங்கூரம் பாய்ச்சி நின்ற

போது விநாயக் தாமோதர் 'பாத்ரூம்' போக வேண்டுமென்று தன்னைக் கண்காணிப்பதற்கென்று நியமிக்கப்பட்டிருந்த காவலனிடம் தெரிவித்தாராம். அவ்வாறே அவன் அவரை பாத்ருமுக்குள் அனுப்பி விட்டு வெளியே காத்திருந்த போது கழிவறையின் மேல்புறத்துத் துவாரம் (Porthole) வழியாக அவர் கடலில் குதித்து விட்டாராம். ஆனால் வேறொரு காவலாளி அவர் குதித்து நீந்தத் தொடங்கியதைப் பார்த்து விட்டிருக்கிறார். அவரை நோக்கித் துப்பாக்கியால் சுட்டிருக்கிறார். ஆனால் விநாயக் தாமோதர் சாவர்க்கர் துளியும் கவலைப்படாமலும் திரும்பிப் பாராமலும் விரைந்து நீந்திச் சென்றிருக்கிறார். பல குண்டுகள் வீணாயின. ஒன்றாவது அவர் மீதுபடவில்லை. கடைசியில் ஒரு வழியாக அவர் மார்சேல்ஸ் துறைமுகத்தையடைந்த போது, இதற்குள் அங்கு செய்தி அனுப்பப்பட்டிருக்க, அங்கிருந்த பிரிட்டிஷ் காவலர்கள் அவரைப் பிடித்து விட்டனர். தாம் ப்ரான்ஸ் நாட்டு மண்ணில் கால் வைத்து விட்டதால் இங்கிலாந்து நாட்டு அரசுக்கு அங்கு தன்னைக் கைது செய்ய அதிகாரம் கிடையாது என்று சாவர்க்கர் வாதாடிப் பார்த்தார். ஆனால் அங்கிருந்த பிரான்சு நாட்டுப் போலீசார் அவருக்கு உதவவில்லை. இதனால் இங்கிலாந்துக் காவலர்கள் அவரைத் தம் கப்பலுக்கு மறுபடியும் இழுத்துச் சென்றார்கள். இதுபற்றிக் கேள்விப்பட்டு மேடம் காமாவும் உங்கள் மெட்றாஸ் பிரசிடென்சியைச் சேர்ந்த வி.வி.எஸ். அய்யரும் உடனே மார்சேல்சுக்கு விரைந்தார்கள். ஆனால் அதற்குள் விநாயக் தாமோதர் கைதாகி இட்டுச் செல்லப்பட்டு விட்டார். இவ்வாண்டு ஜூலை 22-ஆம் தேதியன்று பலத்த போலீஸ் காவலுடன் பம்பாய்க்கு வந்து சேர்ந்த விநாயக் தாமோதர் சாவர்க்கர் பம்பாய் உயர்நீதி மன்றத்தில் விசாரிக்கப்பட்டார். அப்போது நான் பம்பாயில் இருந்தேன். வெடிகுண்டு தயாரிக்கும் வழிமுறை பற்றிய நூலைப் பிரதிகள் எடுத்து விநியோகித்தது, ஆங்கிலேயரை எதிர்த்துப் போராட இந்தி





யர்களைத் தூண்டியது, பயங்கரவாதிகளுக்கு இரகசியமாய்த் துப்பாக்கிகள் அனுப்பியது ஆகிய குற்றச்சாட்டுகள் அவர் மீது சுமத்தப் பட்டன. நாசிக் கலெக்டர் ஜாக்சனின் கொலைக்கும் அவர் மீது குற்றம் சாட்டப் பட்டது. அவர் அனுப்பிய துப்பாக்கியால் தான் கலெக்டர் ஜாக்சன் சுடப்பட்டாராம். தண்டனையாக அவர் சொத்துக்கள் அனைத்தும் சர்க்காரால் பறிமுதல் செய்யப் பட்டன. அந்தமானுக்கு நாடு கடத்தப்பட வேண்டுமென்றும் தம் ஆயுள் முழுவதும் அங்கு அவர் இருக்க வேண்டும் என்றும் தீர்ப்பு வழங்கப்பட்டது உங்களுக்கெல்லாம் தெரிந்திருக்கும். 'என்னைப் போன்றவர்கள் செய்யும் இதுபோன்ற தியாகங்களாலும், அனுபவிக்கும் துன்பங்களாலும் கண்டிப்பாக விரைவிலேயே ஒருநாள் எங்கள் நாடு சுதந்திரம் அடையும்' என்று கோர்ட்டில் முழங்கினார் வீர சாவர்க்கர்.

அய்யா, வீர சாவர்க்கர் போன்ற மாபெரும் ஆத்மாக்களுக்கு முன்னால் என்னைப் போன்றவர்கள் எம்மாத்திரம்! ஆயுள் முழுவதற்கும் அந்தமான் தீவுகளில் சிறைப் பட்டு வாழப் போகும் அம்மாபெரும் மனிதனின் மனம் என்ன பாடுபடும் என்பதை நினைத்துப் பார்க்குந்தோறும், அவருக்காக ஏதும் செய்ய முடியாமல் நிராதரவாக நிற்கும் எங்கள் நிலை மீது எங்களுக்கு ஆத்திரமும் கோபமும் கசப்பும் ஏற்படுகின்றன.

அடிக்கடி உங்களையெல்லாம் நினைத்துக் கொள்ளுகிறேன். அமராவதி, அஞ்சனா, அம்மா மூவருக்கும் எனது அன்பைச் சொல்லுங்கள். என்றாவது ஒருநாள் கட்டாயம் சந்திப்போம். அந்த நாள் விரைவில் வர வேண்டும் என்பது என் ஆசை.

வந்தே மாதரம்!

**ரா**ஜாராமன் விவரிக்க முடியாத வேதனைக்கு ஆட்பட்டார். லண்டனிலிருந்து ஆங்கிலோ - இந்தியனைப் போல் தப்பிச் சென்ற அருணாசலமும் கண்டுபிடிக்கப்பட்டிருக்க மாட்டான் என்பது என்ன நிச்சயம்? - கடிதத்தை மடித்து அவர் தம் கோட்டுப் பைக்குள் வைத்த போது கதவு தட்டப்பட்டது.

"யெஸ்?" என்றார் ராஜாராமன்.

"குட்மார்னிங் வக்கீல் சார்!" என்று சொன்னபடியே அவரது அறைக்குள் சி.ஐ.டி. சிவப்பிரகாசம் நுழைந்தான்.

## 15

**கு**ஞ்சம்மாவுக்கு ஆங்கிலம் கற்றுத் தரப் போவதாய்ச் சொன்ன ராமசாமி, அதை அவளுக்குக் கற்றுத் தரத் தொடங்கி ஆறு மாதங்கள் கழிந்து விட்டன. நாள்தோறும் அவரால் அவளுக்கு வகுப்பு எடுக்க முடியவில்லையாதலால் முன்னேற்றம் குறிப்பிடத் தக்க வகையில் இல்லை. எனினும் அவள் ஆர்வமாய்க் கற்று வந்தாள். எப்படியாவது அஞ்சனாதேவியைப் போல் தானும் 'தஸ் புஸ்' என்று இங்கிலீஷில் உரையாட வேண்டும் என்ற ஆசையால் குஞ்சம்மா படித்ததையே திரும்பத் திரும்பப் படித்துக் கொண்டும் அடிக்கடி எழுதி எழுதிப் பார்த்த வண்ணமும் இருந்தாள்.

முதன் முதலாக அவர்கள் வீட்டுக்கு அஞ்சனா வந்து சென்றதன் பிறகு சென்ற இந்த ஆறு மாதங்களில் ஒரே ஒரு தடவை தான் அவர்கள் வீட்டுக்கு அவள் வந்து சென்றிருந்தாள். அதுவும் வீட்டுக்குள் வராமல் காரில் இருந்தபடியே ஓட்டுநர் கையில் துண்டுக் காகிதம் ஒன்றைக் கொடுத்தனுப்பி விட்டுப் போய் விட்டாள். அப்போது ராமசாமி பள்ளிக்கூடத்தில் இருந்தார். அதனால் வீட்டுக்கு வந்து அவள் பேசச் சங்கோஜப்பட்டிருக்கலாம் என்று குஞ்சம்மா நினைத்தாள். வீட்டுக்குள் வந்து துண்டுக் காகிதத்தைத் தராதது மரியாதைக் குறைவான செயல் என்று அவளை மனத்துள் விமர்சித்த அதே நேரத்தில் அவள் வராததே நல்லதென்றும் தோன்றியது. வாசற்புறத்து சன்னல் வழியாகத் திருட்டுத்தனமாய் அவளைக் கவனித்தாள். அஞ்சனா மேலும் அழகாகி இருப்பதாகப் பட்டதில் கழுத்தை ஒரு நொடிப்பு நொடித்துக் கொண்டு அங்கிருந்து அகன்றாள்.

காரைக் கிளப்பிக் கொண்டு அவள் போனதும், "என்ன கடுதாசி?" என்று விசாலம் விசாரித்தாள்.

"தெரியல்லே. என்னமோ இங்கிலீஷ்லே கிறுக்கி இருக்கு."

"நீதான் இப்ப கத்துக்கறியே?"

"கையெழுத்தைப் படிக்கற அளவுக்கெல்லாம் இன்னும் நான் கத்துக்கல்லே, அக்கா. அதுக்கு இன்னும் நிறைய நாளாகும்."

"அந்தப் பொண்ணு நம்மாத்துக்கு முதமுத வந்துதே, அதுக்கு அப்புறம் ஒரு மூணு நாலு மாசம் ஆகி இருக்குமா?"

"ஆறு மாசத்துக்கு மேலேயே ஆயிடுத்து, அக்கா. அச்சப் பிச்சனு அடிக்கடி கார்ல வந்து நம்மாத்து வாசல்ல இறங்கி, இங்க வந்து அவரோட வம்படிக்குமோன்னு பயந்திண்டிருந்தேன். நல்ல காலம். வர்றதில்லே."

"அதான் மீட்டிங்ல எல்லாரும் சந்திச்சுக்கறாளாமே?"

"அது சரி... இதுகள்ளாம் மீட்டிங்லயும் இன்னொண்ணுலயும் கலந்துண்டு என்னத்தைச் சாதிக்கப் போறதுகளோ தெரியல்லே.

காலா காலத்துல ஒருத்தனுக்குக் கழுத்தை நீட்டினமாம், கொழந்தை குட்டிகளைப் பெத்துண்டமாம்னு இல்லாம."

"அவ அப்பா அம்மாவும் விட்டு வெச்சிருக்காளே. அத்தெச் சொல்லு."

"பணக்காரா எது செஞ்சாலும் நியாயமாயிடறது. இதையே நாம செய்யட்டும். நடக்கிறதே வேற. அது மட்டுமில்லேக்கா, நாலு எழுத்துப் படிச்சுட்டாலே கல்யாணம் வேண்டாம், காட்சி வேண்டாம், எவனுக்கும் அடங்க வேண்டாம்கறாப்ல ஒரு திமிரும் இன்னைக்கும் பொண்களுக்கு வந்துடறது. சுதந்தரமா இருக்கணும்கற ஆசை ஏற்பட்டுடறது. அதான் நாட்டோட சுதந்திரத்துக்கும் இவா பொருத்தமாப் பாடுபடறா."

அஞ்சனாவின் மீது அவளது முதல் வருகை நாளன்று விழுந்த கருத்து குஞ்சம்மாவுக்கு இன்னும் மாறவில்லை என்பதை விசாலம் புரிந்து கொண்டாள். 'நல்ல காலம். அந்தப் பொண்ணு அடிக்கடி ஆத்துக்கு வந்து போகல்லே. அந்த மட்டும் க்ஷேமம்' என்றும் எண்ணிக் கொண்டாள். குஞ்சம்மா பதற்றத்துடன் தொடர்ந்தாள் :

"அவளோட பத்துப் பதினஞ்சு சிநேகிதிகளை வேற காங்கிரஸ்ல அவ சேர்த்து விட்டிருக்காளாமேக்கா? தான் கெட்டது போறாதுன்னு சந்திரபுஷ்கரணியையும் சேர்த்துக் கெடுத்த கதையான்னா இருக்கு" என்றாள் ஒரு சீறலான பெருமூச்சுடன்.

"அவா வீடுகள்ளேயெல்லாம் இவளைத் திட்டு திட்டுன்னு திட்டுவாளே. அந்த பயம் துளியாவது இருக்கா பாரு அவளுக்கு."

"அதான் நீங்க அன்னிக்கே சொல்லிட்டேளேக்கா - எதுக்கும் துணிஞ்ச கட்டைங்கிறாப்ல - அது சரியாத்தான் இருக்கு."

"ஆனா நீ நினைக்கிற அர்த்தத்துல நான் சொல்லல்லே, குஞ்சம்மா. தைரியசாலிப் பொண்ணுங்கிற அர்த்தத்துல மட்டுந்தான் அப்படிச் சொன்னேன்."

குஞ்சம்மா சட்டென்று கழுத்தை ஒரு வெட்டு வெட்டி நாத்தனாரை ஓர் ஆழமான பார்வை பார்த்தபின் தன் விழிகளை அப்புறப்படுத்திக் கொண்டாள்.

பேச்சை மாற்றும் எண்ணத்துடன், "ராமசாமி இன்னிக்கு வர்றதுக்கு லேட்டாகும்னு ஏதாவது சொன்னானா?" என்றாள் விசாலம்.

"அதான் சொன்னாரேக்கா - ஏதோ மீட்டிங் இருக்குன்னு?"

"எங்கேயாம்?"

"எங்கேன்னு என்னிக்குமே அவர் சொன்னது கிடையாதேக்கா!"

இவர்கள் இவ்வாறு பேசிக் கொண்டிருந்த நேரத்தில் ராமசாமியின் பள்ளிக் கூடத்தில் அவரது வகுப்பறையில்தான் அந்தச் சிறிய கூட்டம் நடந்து கொண்டிருந்தது. மேசை விளிம்பில் இலேசாய்ச் சாய்ந்து நின்றவாறு ராமசாமி சொற்பொழிவாற்றிக் கொண்டிருந்தார். உணர்ச்சிவசப்பட்டுப் பேசுகையில் அவர் புருவங்கள் ஏறி இறங்கினாலும் கண்கள் சுருங்கியும் விரிந்தும் பல்வேறு உணர்ச்சிகளை வெளிப்படுத்திய அழகையும் சிவந்த உதடுகள் நெளிந்த நளினத்தையும் கண்ணிமைக்காது பார்த்தபடி இருந்தாள் அஞ்சனாதேவி. தொடக்க காலத்தில் அவர்பால் அவள் உள்ளத்து உணர்ச்சிகள் மிகச் சாதாரணமானவையாகத்தான் இருந்தன. நாட்கள் செல்லச் செல்ல, ராமசாமியின் ஆவேசம் மிக்க பேச்சுக்கள் தன்னுள் விளைவித்த வெறியில் அவள் கொஞ்சங் கொஞ்சமாக அவர்பால் தன் மனத்தை இழக்கலானாள். 'இவருக்கு மட்டும் கலியாணம் ஆகாம இருந்திருந்தால்...' என்ற அசட்டுக் கற்பனை அடிக்கடி அவள் மனத்தில் எழுந்து எழுந்து வீழ்ந்தது. 'அந்தக் குஞ்சம்மா எவ்வளவு அதிருஷ்டசாலி' என்ற எண்ணம் சற்றே அவள்பால் பொறாமையையும் அவள் மனத்தில் தோற்றுவித்துக் கொண்டிருந்தது.

'அந்தச் சுட்டிப்பயல் கங்காதரன் மட்டும் என் பிள்ளையாக இருந்தால்...' என்ற கற்பனையும் அவளுக்கு அடிக்கடி வருவதுண்டு. குழந்தை கங்காதரனின் மீது அவள் தனிப்பட்ட பாசம் கொண்டிருந்தாள். ராமசாமியின் மீது வெளிப்படுத்த முடியாத அன்பையெல்லாம் அவள் அவன் மீது பொழிந்து கொண்டிருந்தாள். பெரியவனானால், கங்காதரன் ராமசாமியின் சாயலில் இருப்பான் என்று அவள் நினைத்தாள். கம்பீரமான பார்வையும், கண்ணியமான பேச்சும், விலகி இருக்கும் தன்மையும் கொண்ட ராமசாமிக்கு மட்டும் மணமாகாதிருந்திருப்பின், தன்னை அவர் காதலிக்க முற்பட்டிருப்பார் என்ற நம்பிக்கை நிறைந்த நினைப்பு, அவள் கொள்ள முயன்ற கட்டுப்பாட்டை மீறி அவள் உள்ளத்தில் அவ்வப்போது எழுந்து சண்டித்தனம் செய்து கொண்டிருந்தது. தன் மனம் அவர்பால் இப்படிக் கட்டுப்பாடிழந்து அலைபாய்ந்து கொண்டிருக்கும் விஷயம் குஞ்சம்மாவுக்குத் தெரியவந்தால் அவள் உணர்ச்சிகள் எப்படியெல்லாம் பாதிக்கப்படும் என்று எண்ணிப் பார்த்த போதோ அவளுள் ஒரு நடுக்கம் பரவியது. எதனாலோ குஞ்சம்மாவுக்குத் தன்னை அவ்வளவாகப் பிடிக்கவில்லை என்று முதல் சந்திப்பின் போதே அவளுக்குத் தோன்றி விட்டது. தான் காங்கிரஸில் இருப்பதும் அடிக்கடி வெள்ளைக்காரன், தேசம், சுதந்திரம் என்றெல்லாம் பேசுவதும் தன் மனைவிக்குப் பிடிக்கவில்லை என்று சில தடவைகள் அவர் சொல்லிச் சிரித்ததுண்டு. அந்த இயக்கத்தில் இருப்பவள் என்பதால் மட்டும் விளைந்த பிடித்தமின்மை என்பதாய்க் குஞ்சம்மாவின் உணர்ச்சியை அவளால் மதிப்பிட முடியவில்லை. அதற்கும் அப்பாற்பட்ட உணர்ச்சி அது என்று அவளது உள்ளுணர்வுக்கு எடுத்த எடுப்பில் பட்டு விட்டது. 'நியாயந்தானே?' என்றும் தோன்றியது.

'ராமசாமி தன் கணவராக இருந்தால், குஞ்சம்மாவுக்குத் தன்னால் அவரை விட்டுக் கொடுக்க முடியுமா?' என்று நினைத்துப் பார்த்த போது அவளுள் ஓர் அதிர்வு தோன்றியது. 'இது தப்பு. தவறான எண்ணம்' என்று அவள் மனம் கூவாமல் இல்லை. ஆனாலும் கற்பனைகளின் கட்டுப்பாடற்ற தன்மையை அவள் அடக்க முயலவில்லை. அவள் மனத்தில் ஒரு கள்ளமும் அதன் விளைவான உறுத்தலும் நிரந்தரமாய்க் குடிகொண்டு விட்டன.

"மிஸ் அஞ்சனா அடுத்தபடி பேசுவார்" என்று ராமசாமி அறிவித்து விட்டு அமர்ந்தார். அப்போதுதான் திடுக்கிட்டவளாகத் தன் எண்ண ஓட்டங்களிலிருந்து விடுபட்ட அஞ்சனா, முதலில் தடுமாறித்தான் போனாள். ஆனால் பேசப் பேச சுயநல சிந்தனைகள் அழிந்து, அவளை சுதந்திர ஆவேசம் ஆட்கொண்டது.

(தொடரும்)

---




**"என்ன சார் இது...? உங்க படத்துக்கு வித்தியாசமா "இஞ்சி சாறு"ன்னு பேர் வச்சிருக்கீங்க?"**

**"கதையை, ஜீரணிக்க முடியலைன்னு யாரும் சொல்லிடக் கூடாது பாருங்க...!"**

**- புதுவண்டி ரவீந்திரன்**



# T.S.S. NIDHI LTD.

ESTD 1973

**THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED**

Regd. Off.: 230, R.K. Mutt Road, Mylapore, Madras 600 004. ☎ 4942303 / 4943365

**BRANCHES:** THIRUVANMIYUR : 112, Thiruvalluvar Salai, Kamaraj Nagar, Madras 41. ☎ 410058
TONDIARPET : 667, T.H. Road, Madras 81.
SAIDAPET : 11, Jones Road, Madras 15. ☎ 4851468

## FIXED DEPOSIT SCHEME

| Period (Months) | 12 | 24 | 36 | 60 |
|---|---|---|---|---|
| Rate of Int. P.A. | 17% | 18% | 19% | 20% |

## KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME

(Re-Investment Plan) For Deposit of Rs.1,000/-

| Period (Months) | 12 | 24 | 36 | 45 | 67 |
|---|---|---|---|---|---|
| Maturity Value | 1190 | 1425 | 1760 | 2025 | 3025 |

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME

Minimum Deposit Rs.10,000/- Period - 12 months

Interest payable monthly **19.5%** p.a. Interest payable annually **21%**

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, REGD. EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS)

## T.S.S. SPECIAL DEPOSIT SCHEME

For Deposit of Rs.10,000/-

| Period (Months) | Maturity Value |
|---|---|
| 120 | Rs.66,000 |
| 180 | Rs.1,82,000 |

## RECURRING DEPOSIT SCHEME

MONTHLY DEPOSIT Rs. 100/-

| Period in Months | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
|---|---|---|---|---|---|---|
| Maturity Value | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

## SAVINGS DEPOSIT SCHEME 9% P.A.

## BUSINESS HOURS

| | Week Days | | Sunday | Holiday |
|---|---|---|---|---|
| Regd. Office Mylapore | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Friday |
| Branch Offices | 9.00 to 12.30 | 2.00 to 4.30 | 9.00 to 12.30 | Tuesday |

## HIGHLIGHTS

- ★ Recognised as a **NIDHI COMPANY** by Central Government of India.
- ★ Company is in 21st year of service.
- ★ Transaction with members only (Rupees two only for membership)
- ★ Premature repayment facility as per terms and conditions.
- ★ Monthly Interest Warrants would be despatched in advance for the year of Deposits.

## LOANS

★ A) Jewel loans granted on Gold ornaments at Rs.300/- per gms. (Rs.2400/- per 8 gms.)
- ★ No Ceiling
- ★ No Charges
- ★ No Interest Tax
- ★ Recurring Deposit not required
- ★ Your Jewels are insured at our cost.

B) Property Mortgage Loans granted on RD basis within Madras city limits.

**P.S. SAMBASIVAM**
Secretary

**G. KUMARAVELU**
Vice-President

**K.R.V. RAMANI**
President



நள்ளிரவின் அமைதியைக் குலைத்துக் கொண்டு சீறிப் பாய்ந்து கொண்டிருந்த ரயில் வண்டியில் ஜன்னலோரம் அமர்ந்திருந்தான் அவன். காற்று முகத்தில் அறைந்து கொண்டிருந்தது.

தூரத்தில் பௌர்ணமி நிலவு குளிராய் ஒளியை உமிழ்ந்து கொண்டு, கூடவே வந்தது.

போர்வைக்குள் அவன்.

நான்கு நாள் தாடி.

அதுவே அவன் உருவத்தைப் பெரிதும் மாற்றியிருந்தது. நான்கு நாள் தாடியுடன், கறுப்புப் போர்வைக்குள் ஒளிந்திருக்கும் அவனை யாரும் அடையாளம் கண்டுபிடிக்க முடியாது என்று அவன் நினைத்தான்.

ஆனால் பக்கத்திலிருந்தவன் அவனை அடிக்கடி முறைத்துப் பார்த்தான். அடையாளம் கண்டு கொண்டானோ?

"எந்த ஊருப்பா நீ...?"

பதிலில்லை.

"எங்கேயோ பாத்த மாதிரி இருக்கே... உன் பேரு என்னாப்பா...?"

பதிலில்லை.

"என்னப்பா பேரும் சொல்ல மாட்டேங்கிற. ஊரும் சொல்ல மாட்டேங்கிற... எங்கப்பா போற...?"

பதிலில்லை.

"டெல்லியா போற...?"

பதிலில்லை.

கேள்வி கேட்டவன் அலுத்துப் போய் தன்னுடைய இடத்துக்குத் திரும்பிச் சென்று விட்டான்.

அதிகாலை.

டெல்லி ஜங்ஷனின் இரைச்சல் அவனை எழுப்பியது. கறுப்புப் போர்வை தலைப்பாகையுடனேயே அவன் இறங்கினான்.

டிக்கெட் கலெக்டரிடம் டிக்கெட்டை நீட்

சுகன்யா

# அவன் அவர் ஐந்தேகால் ரூபாய்

டும் போது அவன் தோள்களின் மீது ஒரு கரம் விழுந்தது.

போலீஸ்...!

"இந்த வெயில் காலத்துல அதுவும் டெல்லியில போர்வையும், தலைப்பாயும் எதுக்கு சார்? அதுலதான் சந்தேகம் வந்தது சார்..."

இன்ஸ்பெக்டரின் மேஜையின் மேல் அவன் பொருட்கள் இருந்தன. இரண்டு செட் பேண்ட், ஷர்ட், வேஷ்டி, கைலி, பேஸ்ட், ஷேவிங் செட்...

இடுப்பைத் தடவிப் பார்த்தார்.

"இருங்க சார். நான் காண்பிக்கறேன்..."

மணிபர்சை எடுத்துக் காண்பித்தான். நோட்டுக்களாக இரண்டாயிரம் ரூபாய்கள். ஐயாயிரம் ரூபாய்க்கு டிராவலர்ஸ் செக்குகள். சுந்தரவதனம் என்று பெயர் இருந்தது.

"எந்த ஊருப்பா...?"

"மெட்றாஸ்..."

"எங்க போற...?"

"பத்ரிநாத்..."

"எதுக்கு....?"

"சாமி பாக்க. ஒரு வாரம் இருக்க..."

மேலே கீழே பார்த்த இன்ஸ்பெக்டர், "வேற ஏதாவது ஐடென்டிடி இருக்கா..."

பர்சின் இன்னொரு அறையிலிருந்து பாஸ்போர்ட்டை எடுத்துக் காட்டினான். மிகவும் ஜாக்கிரதையாக இன்ஸ்பெக்டர் ஒப்பிட்டுப் பார்த்தார். சென்னை விலாசத்தை டைரியில் குறித்துக் கொண்டார்.

"சரி, போகலாம்..." என்றார்.

அவன் புறப்பட்டான்.

"டெர்ரரிஸ்ட் எல்லாரையும் விட்டுடு. இந்த மாதிரி ஆளுங்களைக் கூட்டி வா..."

கான்ஸ்டபிளைத் திட்டுவது கேட்டது.

**ப**த்ரிநாத்துக்கு அவன் வந்து சேரும் போது இரவு மணி ஏழு.

குளிர்காற்று ஊசி போலக் குத்தியது. அவன் கொண்டு வந்த போர்வை அந்தக் குளிருக்கு எந்த மூலை...?

அருகிலிருந்த டீக்கடையில் இரண்டு சப்பாத்தியும், சப்ஜியும் சாப்பிட்டான். சூடாக டீ சாப்பிட்டான். ஒரு பீடி பற்றவைத்துக் கொண்டான். கடந்த ஒரு வார காலமாக டீயும், பீடியும்தான். டீக்கடையில்தான் சாப்பாடு.

அவரவர் சுருண்டு படுத்திருந்தனர். ஏதோ ஒரு திண்ணை காலியாக இருந்தது.

காலை நீட்டிப் படுத்துக் கொண்டான். குளிர்தாங்க முடியவில்லை. போர்வையை இழுத்து விட்டுக் கொண்டான்.

சுருண்டு கொண்டான்... காலை வரை.

**வெ**யில் 'சுரீர்' என்று அடித்தது. பத்ரிநாத் சிகரத்தில் கூட வெய்யிலா...!

'ஆமாம்' என்பது போல கண்கள் கூசியது.

மெல்லத் தலையை உயர்த்திப் பார்த்தான்.

என்ன இது? போர்வையை விலக்க முடியவில்லை. ஏது இந்த தடித்த கம்பளி?

சுற்றுமுற்றும் பார்த்த போது விடை கிடைத்தது.

அருகில் புன்னகையுடன் நின்றிருந்தார் அவர்.

அவர் முகத்தில் இருந்த ஏதோ ஒன்று அவனை காந்தம் போல இழுத்தது.

அவர் வயது என்னவென்று சொல்ல முடியவில்லை. அறுபதும் இருக்கலாம் எண்பதும் இருக்கலாம். சிவந்த முகம். மார்பு வரை வெண்மையான தாடி. அவர் கண்களில் இருந்து ஒரு அசாத்தியமான ஒளி பரவுவதை அவன் உணர்ந்தான்.

"இந்தக் கம்பளி..." அவன் திகைப்பை உணர்ந்து கொண்ட அவர், புன்முறுவலுடன் கம்பளியை மடித்து எடுத்துக் கொண்டார்.

"தம்பி, தமிழ்நாடா...?"

"ஆமா சாமி..."

தரையைத் தட்டினார். உட்கார்ந்து கொண்டார்

"வழக்கமா நா இங்க படுக்கறது. ராத்திரி வந்து பாத்தேன். நீ படுத்திருந்த..."

"சாமி, மன்னிக்கணும்..."

"பரவாயில்லப்பா. குளிர்ல நடுங்கிண்டு இருந்த! கம்பளியைப் போர்த்தினேன்...."

"அப்ப சாமி, நீங்க..."

"அதனால என்னப்பா, ஆமா, டீ சாப்பிடறயா...?"

ஒரு நிமிடத்தில் அவர் காந்த சக்தி தன்னைக் கவர்ந்து விட்டதையும், தான் அவர் அத்தியந்த சீடனாகி விட்டதையும் அவன் உணர்ந்தான்.

அதற்குள் ஒரு பையன் சிறிய மண் குடுவையில் டீ கொண்டு வந்து நீட்டினான்.

"சாப்பிடுப்பா..."

அருந்தி முடித்தான்.

பின் தயக்கத்தை உதறி விட்டுக் கேட்டான்.

"சாமி பேரென்னவோ...?"

"தம்பி, பேரெல்லாம் கேட்காதே..." புன்னகையுடன் கூறினார் அவர்.

திரும்ப, தன்னுடைய ஊர், பேர் இவற்றை அவர் கேட்கவில்லையே என்ற குறை அவனுக்கு.

அவன் சொல்லத் தயாராக இருந்தான். ஆனால் அவர் கேட்கவில்லை.

"போய்க் குளிச்சுட்டு வாப்பா..."

குளியலா. இந்த மலை உச்சியிலா...?

அவன் தயக்கத்தைப் புரிந்து கொண்ட அவர் புன்முறுவலுடன் கூறினார்.

"கவலைப்படாதே. சூடா வென்னீர் இருக்கு..."

"வெந்நீரா... இங்கயா..."

"வா போகலாம்..."

பத்ரிநாராயணர் கோவிலுக்கு அருகிலேயே வெந்நீர் ஊற்று இருந்தது.

"குளிச்சிட்டு வாப்பா..."

சட்டை, வேட்டி, பை எல்லாவற்றையும் அவரிடம் கொடுத்தான். மணிபர்ஸ், வாட்ச் இரண்டையும் தரும் போது கை சற்றுத் தயங்கியது.

அவர் மேல் கண்வைத்துக் கொண்டே குளித்து விட்டு வந்தான்.

மேலே ஏறி வந்தால்...

ஒரு நொடியில் அவரைக் காணோம்!

என்ன செய்வது? பணம், சட்டை, வேட்டி எல்லாம் போய் விட்டது. என்ன செய்வது?

பதற்றத்துடன் சுற்றுமுற்றும் பார்த்தான்.

"இந்தா தம்பி..."

குரல் கேட்டுத் திரும்பினான்.

"இங்கதான் இருக்கேன்"

ஒரு தூணின் அருகில் அமர்ந்திருந்தார்.

திரும்ப வாங்கிக் கொண்டு, சாமான்களை ரகசியமாகச் சரிபார்த்துக் கொண்டான்.

அப்பாடா! உயிர் வந்தது.

"போய் சாமி பாத்துட்டு வா..."

"இங்கேயே இருங்க சாமி..."

உள்ளே சென்று பத்ரிநாராயணரை தரிசனம் செய்து விட்டு வந்தான். பகலெல்லாம் அவரோடு பேசிக் கொண்டேயிருந்தான்.

அன்று இரவு, அவரிடம் பல சந்தேகங்களைக் கேட்டான். அவர் கூறிய பதில்களெல்லாம் ஒரு பக்கம் தமாஷாக இருந்தது. மறு பக்கம் உண்மையாகவும் இருந்தது.

"சாமி கடவுள் இருக்கா...?"

"இல்லாம என்னப்பா, கண்டிப்பா இருக்கு..."

"கடவுளை எங்கே பாக்கலாம்?"

"உனக்குள்ளயே பாருப்பா..."

"சாவுன்னா என்ன சாமி...?"

"சாவைப் பத்தி ஏம்பா பயப்படறே? உன்னுடைய விருப்பப்படியா பிறந்தே? பிறப்பு எப்படி வந்ததோ, சாவும் அதே மாதிரி நிச்சயம். அதை நினைச்சு பயப்படாதே..."

நீண்ட நேரம் யோசித்து விட்டு இறுதியாக ஒரு கேள்வியைக் கேட்டான்.

"சாமி, வாழ்வின் பொருள் என்ன... அதாவது வாட் இஸ் த மீனிங் இன் லைஃப்...?"

சாமி யோசிக்காமல் கூறினார்.

"அன்பு. அன்புதான் வாழ்க்கையின் பொருள். அன்பைக் கொடு. மனிதன், பிராணி, மரம், செடி, கொடி உன்னைச் சூழ்ந்த உலகம், பூமி, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் அத்தனை மேலும் அன்பு செலுத்து. இதுதான் வாழ்வின் பொருள். அன்புதான் வாழ்வு, அன்புதான் கடவுள். அதைத் தெரிந்து கொள்...."

ஏதோ புரிந்தது போல் இருந்தது அவனுக்கு.

அப்படியே தூங்கிப் போனான்.

காலை.

எழுந்தவன் முதலில் அதிர்ச்சியுற்றான்.

பிறகு சிரிக்க ஆரம்பித்தான்.

'ஓ!' என்று அவன் சிரித்தது மலை முழுக்கக் கேட்டது போல இருந்தது.

"என்னப்பா, என்ன ஆச்சு...?"

அவர் ஓடி வந்தார்.

"சாமி இதப் பாருங்க..." மீண்டும் சிரித்தான்.

அவனைச் சுற்றிச் சில்லறைகள்.

"சாமி, என்னைப் பிச்சைக்காரன்னு



"நேத்து எனக்கும் என் காதலிக்கும் பீச்சுல பயங்கர சண்டை!"

"அப்புறம் என்னாச்சு?"

"கடைசியில சுண்டல்காரனே எங்க ரெண்டு பேருக்கும் சுண்டலை சமமா பிரிச்சுக் கொடுத்தான்!"

— கொங்கணாபுரம் வே. செந்தில்

நினைச்சு, சில்லறை போட்டிருக்காங்க..."

எல்லாவற்றையும் எடுத்து எண்ணினான்.

ஐந்தே கால் ரூபாய் தேறியது.

அவரிடம் கொடுத்தான்.

"சாமி, நீங்க கேக்கல, நான் யார் தெரியுமா...?"

"யாருப்பா...?"

"நான் சினிமா ஸ்டார் சுந்தர். இன்னைக்குத் தேதியில இருபத்தைஞ்சு கோடி ரூபாய் வெள்ளையிலேயே இருக்கு என்கிட்ட. மனநிம்மதி தேடி இங்க வந்திருக்கேன். என் ரசிகர்கள் என்னைக் கண்டுபிடிச்சுடுவாங்கன்னு முகத்தை மூடி மறைச்சுண்டு வந்தேன். என்னோட ஒரு கால்ஷீட் பணம் அஞ்சு லட்சம். எனக்கு அஞ்சே கால் ரூபாய் பிச்சை போடறாங்க. ஹோ...!"

மனம் விட்டுச் சிரித்தான்.

அந்தச் சிரிப்பில் அவன் மனம் லேசாகியது. தான் தேடி வந்த நிம்மதி கிடைத்ததை உணர்ந்தான். அதுதானே அவனுக்கு வேண்டும்...

**அ**டுத்த நாள் காலை.

டில்லி செல்லும் பஸ் தயாராக இருந்தது.

"வர்றேன் சாமி..."

அவரிடம் விடைபெற்றுக் கொண்ட அவன் பஸ்ஸை நோக்கி நடந்தான்.

"ஏம்பா ஷேவ் பண்ணிக்கக் கூடாது...?"

"வேண்டாம் சாமி, ஷேவ் பண்ணிட்டா, என் ரசிகர்கள் என்னை அடையாளம் கண்டுபிடிச்சுடுவாங்க. அது மட்டுமில்லே. இப்பவே, தமிழ்நாட்டுப் பத்திரிகைகள் எல்லாத்துலயும் இதுதான் நியூசா இருக்கும். நடிகர் சுந்தரைக் காணோம்னு. யாருக்குமே நான் இங்க வந்தது தெரியாது..."

**ப**ஸ்ஸில் அமர்ந்திருந்த ஒருவன் அவர்களையே உற்றுப் பார்ப்பது தெரிந்தது.

சுந்தர் பதற்றமடைந்தான்.

"சாமி, என் ரசிகன் போல இருக்கு. என்னை அடையாளம் கண்டுபிடிச்சுட்டான்..."

பஸ்ஸில் இருந்தவன் இறங்கினான்.

ஓடி வந்தான்.

"சார் நீங்களா...?"

ஓடி வந்த அவனை சுந்தர் நிறுத்தி, "தம்பி தொந்தரவு பண்ணாதே. இங்கேயுமா உன் தொந்தரவு. நான் மனநிம்மதி தேடி வந்திருக்கேன்..." என்றான்.

வந்தவன் அவன் கைகளைத் தட்டி விட்டான்.

"போவ் யாருய்யா நீ. உன்ன யாருய்யா கேட்டது? என் தெய்வமே இங்க இருக்கு..."

'அவர்' கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்தான்! கால்களைக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

"எழுந்திருப்பா எழுந்திரு..."

அவன் எழுந்திருக்க, அவன் குடும்பமே வந்து அவர் கால்களில் விழுந்தது.

"சாமி யாருப்பா...?" அவன் கேட்டான்.

"சாமி தெரியாதா. டாக்டர் சாம்ப சிவம்னா உலகம் பூரா தெரியுமே. எத்தனை பேருக்குக் கண் கொடுத்திருக்காரு. எனக்குக் கண் வந்ததே இவராலதானே. அமெரிக்காவெல்லாம் போய்ப் படிச்சுட்டு வந்தாரு. இவரோட அஞ்சு நிமிஷம் பேச, மூணு மாசம் முன்ன அப்பாயின்ட்மென்ட் வாங்கணுமே. இவரோட இவ்வளவு கூடப் பழகறதுக்கு என்ன புண்ணியம் செய்தாயோ! இப்ப, எல்லாம் வேணாம்னு சொல்லிட்டு, பத்ரிநாத்ல சாமியாராட்டம் சுத்தறாரே, சாமி..."

பஸ்ஸில் இருந்த பயணிகள் அனைவரும் அவருக்கு நமஸ்காரம் செய்ய, சுந்தர் தன் சிறுமையை உணர்ந்தான்.

லட்சலட்சமான சொத்துக்களை உதறிவிட்டு வாழ்வின் பொருளை உணர்ந்த அவர் எங்கே, அதை உணர வந்த இடத்திலும், 'தான்' என்ற அகங்காரம் குறையாத அவன் எங்கே...?

அகங்காரம் முற்றிலும் கரைய, பஸ்ஸில் உட்கார்ந்தான்.

பஸ் புறப்பட்டது.

"தம்பி, இத மறந்துட்டயே..." அவர் நீட்டிய பொட்டலத்தை வாங்கிக் கொண்டான்.

சற்று நேரம் கழித்துப் பிரித்துப் பார்த்தான்.

அவனுக்குப் 'பிச்சை'யாகக் கிடைத்த ஐந்தேகால் ரூபாய்.

We accept Fixed Deposits at the rate of 24% with incentives.

# நீங்கள் சொந்த வீடு வாங்க இதுவே சரியான நேரம்

**காசி குரூப் ஹவுசிங் பெனிபிட் ஸ்கீமின் வெற்றிகரமான 14-வது குலுக்கல் 30.10.94 அன்று காசி திரையரங்கு வளாகத்தில் பிரபல திரைப்பட நட்சத்திரங்களின் முன்னிலையில் நடைபெற உள்ளது.**

இத் திட்டத்தில் புதிதாக வழங்கப்பட்ட GIFT CARD குலுக்கல் மூலம் உறுப்பினர்களை தேர்ந்தெடுத்து கவர்ச்சிகரமான சிறப்புப் பரிசுகள் வழங்கப்பட்டன.

இத் திட்டத்தில் ரூ. 1,250/- முதல் ரூ. 5,000/- வரை மாதத் தவணைகளாகச் செலுத்தி குலுக்கல் மூலம் 277 முதல் 1111 சதுர அடிகள் வரை உள்ள வீடுகளைத் தேர்ந்தெடுத்து சொந்த வீடாக்கிக் கொள்ளலாம். மீதித் தொகையை சொந்த வீட்டிலிருந்து கொண்டே வாடகை போல செலுத்தலாம். இத் திட்டத்தில் சேருபவர்கள் அனைவருக்கும் ரூ. 300/ முதல் ரூ. 1,000/- வரை ஒவ்வொரு கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

**சுபமங்களா திட்டம் :**

இத் திட்டத்தில் உடன் குடிபுகத் தயாரான நிலையில் உள்ள வீடுகளின் மொத்த விலையில் ரூ. 10,000/- மட்டுமே செலுத்தி உடனே சொந்த வீட்டில் குடியேறலாம். மீதித் தொகைக்கு நாங்கள் கடன் உதவி ஏற்பாடு செய்து தருகிறோம். இத் திட்டத்தில் வீடு பதிவு செய்பவர்கள் அனைவருக்கும் ரூ. 1,000/- மதிப்புள்ள கவர்ச்சிகரமான பரிசுகள் வழங்கப்படும்.

**வீடு கிடைக்கும் இடங்கள் :**

சென்னை கே. கே. நகர் மேற்கு, விருகம்பாக்கம், வளசரவாக்கம், சாலிகிராமம், வடபழனி, குமரன் காலனி, கில் நகர் போன்ற இடங்களில் வீடுகள் கட்டித் தருகிறோம்.

**ஒரு சதுர அடியின் விலை ரூ. 450/- மட்டுமே!**

**FIXED DEPOSITS :**

நீங்கள் முதலீடு செய்யும் வைப்பு நிதித் தொகைக்கு 24% வட்டியுடன் ஊக்கப் பரிசுகளும் வழங்கப்படுகிறது. மேலும் கூட்டு வட்டி வைப்பு நிதியில் நீங்கள் முதலீடு செய்யும் தொகை 3½ ஆண்டுகளில் இரட்டிப்பாகிறது.

மேலும் விவரங்களுக்கு :

## காசி ஹவுசிங் & டெவலப்மென்ட் லிமிடெட்

மற்றும்

## காசி பில்டர்ஸ்

காசி தியேட்டர் காம்ப்ளக்ஸ்,
91, 92 ஜவாஹர்லால் நேரு சாலை, அசோக் நகர், சென்னை - 600 095.
போன் : 4821969, 4822206 ஞாயிறு முழு நேரம் அலுவலகம் உண்டு.
FAX : 044-4821897

# பணப்புழக்கம் பற்…

திருப்பூரில் நிலவி வரும் அபரிமிதமான பணப் புழக்கம் வளர்ச்சிக்கா? வீழ்ச்சிக்கா? - இது பட்டி மன்றத் தலைப்பு.

'வளர்ச்சிக்கே' என்று பேசியவர்கள் ரகுநாதன், ராஜமாணிக்கம், சேனாதிபதி வடிவேல். 'வீழ்ச்சிக்கே' அணி சார்பாக வாதாடினார்கள் பாலகிருஷ்ணன், சிவதாஸ், தாமோதரன்.



• 'வீழ்ச்சிக்கே' - என வாதிடுகிறார்கள்

## வீழ்ச்சிக்கே

கோடி கோடியாகப் பணம் புழங்கி என்ன; பண்பாட்டில் வீழ்ச்சி கண்டிருக்கிறோமே! பணம் மிகுதியாகப் புழங்குவதாலேயே தீய பழக்கங்களுக்கும் அடிமையாயிடறாங்க -பனியன் தொழிற்சாலை அதிகம் உள்ள திருப்பூரில்தான் பிராந்தி கடைகளும் அதிகம். டீ கடை போல் மூலைக்கு மூலை பிராந்திக் கடைகள்.

பணப்புழக்கத்தால் திருப்பூரில் வளர்ந்திருப்பது சினிமா தியேட்டர்களின் எண்ணிக்கைதான்! மற்ற ஊர்களில் ஓடாத உருப்படாத படங்கள் கூட இங்கே ஓடுகின்றன. காரணம் பணமிருக்கிறது; பொழுது போக வேண்டும்!

இதெல்லாம் போக, பணப் புழக்கம் அதிகரித்துள்ளதால் திருட்டுப் புரட்டும் குற்றங்களும் கூட மித மிஞ்சிப் பெருகிவிட்டன. சரி, பணப் பெருக்கத்தால் பயனடைந்தவர்கள் யாரென்று பார்த்தால் உயர் மட்டத்தினர்தான். நடுத்தர வர்க்கமும் ஏழை எளியவர்களும் இன்னமும் கஷ்டப்பட்டுக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

பணப் பெருக்கத்துக்குக் காரணமான தொழில் பெருக்கத்தால் சுற்றுச் சூழலும் மாசு பட்டிருக்கிறது. மனித மனமும் மாசு பட்டுப் போயிருக்கிறது. அதனால்தான் போது மென்ற மனமின்றி மேலும் மேலும் சம்பாதிக்கப் பேராசை கொண்டிருக்கிறோம்.

இத்தகைய பணப் புழக்கத்தால் எல்லோருக்குமே பேராசை தொற்றிக் கொள்வதால் அரசு ஊழியர்கள் கூட தங்கள் பணிகளுக்கிடையே சைட் பிஸினஸ் ஆரம்பித்து விடுகிறார்கள். இதனால் அரசாங்க அலுவல்கள் தேங்கிப் போகின்றன. எல்லாவற்றையும் விட சோகம், குறைச்சலாக சம்பாதிக்கறவங்களை வங்கிகள்ல மதிக்கறதில்லை. ஆயிரம் - ஐயாயிரம் குறைஞ்ச பட்சமா போட்டாத்தான் சேமிப்புக் கணக்கே ஆரம்பிக்கலாம்னு வங்கிகள்ல சொல்றாங்க. சிறிய கணக்குகள்வைச் சுக்கிட்டா அவங்களுக்கு நச்சு வேலை அதிகமாகுதாம்!

இதையெல்லாம் எப்படிங்க வளர்ச்சின்னு சொல்றது..? இருப்பூரின் பணப்புழக்கம் வீழ்ச்சிக்கு தான்னு வருத்தத்தோட சொல்ல வேண்டியிருக்கு...

## வளர்ச்சிக்கே

இன்றைக்கு பம்பாய் தலால் ஸ்ட்ரீட்டோட போட்டி போடற அளவுக்கு வளர்ந்திருக்கு திருப்பூர். ஒரு வாரத்தில் இந்தச் சின்ன ஊரில் 27 கோடி ரூபாய் பணம் புழங்குகிறது! அன்னியச் செலாவணி சம்பாதிக்கறதுல இந்தியாவிலேயே நிகரில்லாத இடம் பெற்று நம் நாட்டுப் பொருளாதாரத்தையே நிர்ணயிக்கற அளவுக்கு உருவாகியிருக்கு. இந்த ஊரின் அதிசய வளர்ச்சி அதன் மக்களின் வளர்ச்சியும்தானே!

அன்னியச் செலாவணி புழக்கம் அதிகமாயிட்டதால் அதற்கெனத் தனி வங்கிக் கிளைகளைத் திறக்க ஆரம்பிச்சிருக்காங்க. இது பெருமைப்பட வேண்டிய வளர்ச்சி.

பெரிய நகரமான கோவையில போய்க் கேளுங்க, எத்தனை வீடுகள்ல வாக்வம் கிளீனர் இருக்குன்னு? பலபேர் அந்தச் சாதனம் பத்திக் கேள்விப்பட்டிருக்கவே மாட்டாங்க. இங்கே திருப்பூரில் சின்னச் சின்ன வீடுகளில் எல்லாம் வாக்வம் கிளீனர் வந்தாச்சு; சௌகரியங்கள் பெருகியாச்சு.

பண்பாட்டு வீழ்ச்சி என்பது பணத்தால் வருவதில்லை. மாறாக பணப் புழக்கம் இருப்பதால் கலை, இலக்கியம் வளர்க்கும் தமிழ்ச் சங்கம் போன்ற அமைப்புகள் சிறப்பாகச் செயல்படுகின்றன. கல்வி நிலையங்களுக்கு அவை உதவுகின்றன. நம் ஊர் மாணவர்களும் பெருமைக்குரிய வகையில் மதிப்பெண்கள் பெற்றுப் பிரகாசிக்கிறார்கள்.

# ஒரு பட்டிமன்றம்..!

மருத்துவக் கல்லூரிகளில் இடம் பிடிக்கிறார்கள். செல்வந்தர்கள் 'பந்தா' பண்ணிக் கொள்ளாமல் சமுதாயப் பணிகளில் நேரடியாக ஈடுபடுகிறார்கள்.

சாலைகள் போடுவது, குடி நீர்த் திட்டம் போன்ற எல்லாமே பணப் புழக்கத்தைச் சார்ந்து விளைந்திருக்கும் வளர்ச்சிதான்.

மேலும், பணப் புழக்கம்தான் பலரையும் சுய தொழில் தொடங்கத் தூண்டுகிறது; அதற்கான வாய்ப்புகளை ஏற்படுத்தித் தருகிறது. எனவே திருப்பூரின் பணப் புழக்கம் வளர்ச்சி, வளர்ச்சி, வளர்ச்சிக்கே!



• 'வளர்ச்சிக்கே.....'

திருப்பூரில் நடந்த கல்கி வாசகர் வட்ட நிகழ்ச்சியில்தான் மேற்படி பட்டி மன்றம் நடைபெற்றது. பல வாசகர்கள் பேச முன் வந்ததால், குலுக்கலில் அணிக்கு மூவரைத் தேர்ந்தெடுத்தோம். அணியினரும் பேசி முடித்த பிறகு பார்வையாளர்களுள் பலரும் உற்சாகமாக வந்து கருத்துக்களைக் கூறினார்கள். வாசகர்கள் 'திருப்பூரின் பணப் புழக்கம் வீழ்ச்சிக்கே' என்று தீர்ப்பளித்த போதிலும் அந்த உணர்வை மேலிட அனுமதிக்கக் கூடாது என்று அடித்துச் சொல்லி விளக்கினார் டாக்டர் முருகநாதன். நிகழ்ச்சிக்குத் தலைமை தாங்கிய இவர், 'எந்த நடவடிக்கையிலும் நன்மையுடன் சில தீமைகளும் இருக்கத்தான் செய்யும் என்று சுட்டிக்காட்டி, அதற்காக மனம் தளர்வதோ, வளர்ச்சியைப் பழிப்பதோ நியாயமில்லை என்று எடுத்துச் சொன்னார்.

சிறப்பு விருந்தினராக வந்திருந்த எம்.எல்.ஏ. பழனிசாமியும் டாக்டர் முருகநாதனின் கருத்தை ஆமோதித்ததுடன் வீட்டு மனைத் திட்டம், மூன்றாவது குடி நீர்த் திட்டம் போன்றவற்றைச் சொன்னார். 'மரங்கள் நடுவதன் மூலம் சுற்றுச் சூழல் மாசைக் கட்டுப்படுத்தலாம். அதற்கு இலவச மரக் கன்றுகள் பெற்றுத் தர ஏற்பாடு செய்கிறேன்' என்றார்.

'திருப்பூருக்கு வந்த பிறகுதான் நாங்கள் மூன்று வேளை வயிறாரச் சாப்பிடுகிறோம்' என்றும் 'என் ஐந்து பெண்களின் கல்யாணம் பற்றிய கவலையே நான் திருப்பூர் வந்த பிறகு தான் மறைந்தது' என்றும் தொழிலாளர்கள் உருக்கமாக எழுதியதை எம்.எல்.ஏ. குறிப்பிட்ட போது கூடியிருந்த திருப்பூர் வாசிகள் எல்லோரும் பெருமையடைந்தார்கள் என்றுதான் சொல்ல வேண்டும்.

இந்தக் கூட்டத்தில், திரைப்பட நகரம் திறந்தாச்சு' என்ற ஒரு வரியைப் பயன்படுத்தி, கவிதை எழுதும் போட்டியும் வைத்தோம். கவிதைப் போட்டியின் முடிவை கல்கி இதழில் அறிவிப்பதாகச் சொல்லியிருந்தோம். இதோ முடிவு :

காவல் நிலையக் கற்பழிப்புக்களும்
சின்னாம்பதி துயரங்களும்
தொடர்கதையாச்சு!
கட் அவுட் கலாசாரம்
முழு நாவலாய் வளர்ந்தாச்சு!
திரைப்படக் கட்டணம் உயர்ந்தாச்சு,
ரசிகனின் பாக்கட் காலியாச்சு!
வேலையில்லாத் திண்டாட்டம் உயர்ந்தாச்சு,
வேதனைகள் நாளும் வளர்ந்தாச்சு!
ஆனாலும் என்ன? கவலையை விடு தம்பி!
திரைப் பட நகரம் திறந்தாச்சு!

— ஜி. கதிரேசன்.

படங்கள் : பாலாஜி



• வாசகர் வட்டத்திற்கு வந்திருந்த விருந்தினர்கள்

# நினைவலைகள்

"THERE IS NO SUCH THING AS A 'SELF MADE MAN'. WE ARE MADE UP OF THOUSANDS OF OTHERS."

— GEORGE MATHEW ADAMS

**தெ**ய்வத்தாய் —

திரு. ஆர். எம். வீரப்பன் அவர்கள் சத்யா மூவிஸ் என்கிற தயாரிப்பு நிறுவனத்தைத் தொடங்கி, அவர் தயாரித்த முதல் திரைப் படம்.

சத்யா மூவிஸ் நிறுவனத்திற்கு என்ன வயது ஆகிறதோ அத்தனை ஆண்டுகள் திரையுலக சர்வீஸ் எனக்கும். ஏறத்தாழ முப்பது ஆண்டுகள். நான் திரைக்கதை, வசனம் அமைத்து வெளிவந்த முதல் தமிழ்ப்படமும் 'தெய்வத்தாய்'தான். எனது நாடகங்களைப் பார்த்திருந்த ஆர்.எம்.வீ. அவர்கள், மக்கள் திலகம் எம்.ஜி.ஆர். அவர்களிடம் என்னைப் பற்றிச் சொல்லி, தமது தெய்வத்தாய் படத்திற்கு நான்தான் திரைக்கதை வசனம் அமைக்க வேண்டுமென்று என்னை சிபாரிசு செய்திருக்கிறார்.

எம்.ஜி.ஆர். அவர்களுக்கு வசனம் எழுதுவதென்பது ஒரு தனிக்கலை. நான் காட்சிகளின் வசனத்தை எழுதி ஆர்.எம்.வீ. அவர்களுக்கு அனுப்புவேன். ஆர்.எம்.வீ. அவர்கள் வசனங்களைத் திருத்தி எழுதுவார். சில நேரங்களில் முழுப் பக்க வசனமும் அடிக்கப்பட்டு Margin விட்ட இடத்தில் புதிதாக எழுதியனுப்புவார். எனக்குக் கோபம் கோபமாக வரும். வேறுவழி இல்லாமல் பொறுத்துக் கொள்வேன். சரித்திரம் படைத்த CECIL B. DEMILLE ஒருமுறை தாம் தயாரிக்கவிருந்த திரைப்படத்தின் SCRIPT எழுதியவருக்கு, அதைத் திருப்பியனுப்பி, கூடவே ஒரு குறிப்பும் எழுதி அனுப்பினாராம்... அதில் SCRIPT ல் நான் "கிராஸ்" பண்ணி அடித்திருக்கும் காட்சிகள் எல்லாம் எனக்குப் பிடிக்கவில்லை; 'கிராஸ்' பண்ணாமல் விட்டு வைத்திருக்கிற அனைத்தும் எனக்குத் திருப்தியாக இல்லை" என்று குறிப்பிட்டிருந்தாராம். கிட்டத்தட்ட அதே நிலைதான் எனக்கும். ஆனாலும் ஆர்.எம்.வீ. அவர்கள் அவ்வப்பொழுது புத்திமதி சொல்வார்.

"நீங்கள் மேல்மட்ட ரசிகர்களை மட்டும் மனத்தில் வைத்துக் கொண்டு எழுதக் கூடாது. எந்தக் கதாபாத்திரத்தில் எம்.ஜி.ஆர். நடித்தாலும் அது எம்.ஜி.ஆர்தான்! அவருடைய PERSONAL IMAGE தான் வசனங்களில் எதிரொலிக்க வேண்டும். அவர் போலீஸ் இன்ஸ்பெக்டராக நடித்தாலும் சரி; கள்ளனாக (மலைக் கள்ளன்) நடித்தாலும் சரி. உங்களது 'லாஜிக்' எல்லாம் எம்.ஜி.ஆர். இல்லாத படங்களில் நீங்கள் வைத்துக் கொள்ளுங்கள்."

M.G.R. என்கிற PHENOMENON ஐ வைத்துப் பார்க்கும் போது இது எனக்குச் சரியாகப் பட்டது.

**7**

பிறகென்ன?

'YOURS OBEDIENTLY'தான்!

'LOGIC' ஐ விட்டு விட்டு 'MASS PSYCHOLOGY' தெரிந்து கொண்டேன்.

எம்.ஜி.ஆர். படங்களில்.... ஹீரோ ஒரு கதாநாயகியைக் காதலித்து கைப்பிடித்தால் அப்படிப்பட்ட அழகிய பெண்ணைக் கனவிலும் நினைத்துப் பார்க்க முடியாத ஆண் ரசிகர்கள், தாமே காதலில் வெற்றி பெற்ற மாதிரி ஒரு சந்தோஷத்தை அடைகிறார்கள்.

ஆனால் அதே சமயம் ஹீரோவை நேசிக்கின்ற/காதலிக்கின்ற பெண் ரசிகைகள் ஏமாற்றமடைகிறார்கள். இதுதான் எந்தப் பாப்புலர் கதாநாயகனுக்குமுள்ள இக்கட்டான நிலை!

எம்.ஜி.ஆர். என்கிற PHENOMENON பற்றி சொல்லவே வேண்டாம்!

**எ**ம்.ஜி.ஆர். அவர்களைப் படப்பிடிப்பு நேரத்தில் ஒருநாள் சந்தித்த போது ஒரு குட்டிக் கதை சொன்னார்.

**கே. பாலசந்தர்**



• தெய்வத்தாய் (படம்-உதவி : பிலிம் நியூஸ் ஆனந்தன்)

ஒரு ஆற்றிலே வெள்ளம் கரைபுரண்டு ஓடுகிறது. தண்ணீரில் ஒரு தேள் அடித்துச் செல்லப்படுகிறது. ஒரு தவளையிடம் அந்தத் தேள் கெஞ்சுகிறது.

"உன் தோள் மீது என்னைச் சுமந்து இந்த வெள்ளத்திலிருந்து என்னைக் காப்பாற்று."

"கரைக்குப் போனவுடன் நீ என்னைக் கொட்டி விடுவாயே! உன்னை நான் எப்படிக் காப்பாற்றுவது?" - இது தவளை.

"நன்றியில்லாமலா போய் விடுவேன்! என்னை மரணத்திலிருந்து காப்பாற்ற விருக்கிறாயே!" இது தேள்.

தவளை ஒப்புக் கொண்டு தேளைக் கரை ஏற்றுகிறது. கரைக்கு வந்து சேர்ந்தவுடன் தேள் தவளையைக் கொட்டி விடுகிறது.

"நன்றி கெட்டவனாகி விட்டாயே" என்று கதறி அழுகிறது தவளை, வலி தாங்க முடியாமல்.

"கொட்டுவது என்பது என் குணம். என் பிறவிக் குணத்தை நான் எப்படி மாற்றிக் கொள்ள முடியும்?" என்று சொல்லியபடியே தேள் ஓடி விடுகிறது.

எம்.ஜி.ஆர். சொன்னார்.

"இந்தத் தேன் மாதிரி ஒரு கெட்ட குணம் படைத்தவன் வேஷத்தை நான் போட்டாலும்... குண விசேஷத்தை எனக்காக மாற்றியமைக்க வேண்டி வரும். அதாவது, கரை சேர்ந்த தேள்... தவளைக்கு நன்றி செலுத்தும் வகையில் முத்தமிட்டுச் செல்ல வேண்டும்."

இந்தக் கதை சொன்ன போது M.G.R. அவர்களுடைய 'IMAGE' எனக்கு முழுமையாகப் புரிந்தது.

இன்னொரு முறை படப்பிடிப்பின் போது நடந்த ஒரு சம்பவம். யாரோ அவரைப் பார்க்க வந்திருந்தார்கள். M.G.R.ன் சிறப்புகளை வாயாரப் புகழ்ந்து பாராட்டினார்கள். அப்பொழுது M.G.R. சொன்னார்.

"என்னுடைய சிறப்புகளுக்கு நான் காரணம் இல்லை... ஆயிரக்கணக்கான பேர் காரணம் என்று சொல்வேன். நீங்கள் பேசி விட்டுப் போன பிறகு உங்களிடமிருக்கிற ஏதாவது ஒரு நல்ல குணம் என் மனத்திலே பதிந்து போகும். என்னையும் அறியாமல் அதையும் நான் கடைப்பிடிக்க ஆரம்பித்து விடுவேன்."

இந்தச் சம்பவம் என் மனத்திலே ஆழப் பதிந்து விட்ட ஒரு சம்பவம். இதையேதான் மேலைநாட்டு அறிஞர் ஒருவர் சற்று வேறு விதமாகச் சொல்லியிருக்கிறார். கட்டுரையின் ஆரம்பத்தில் குறிப்பிட்டிருக்கும் மேற்கோளை இந்த இடத்தில் படித்துக் கொள்ளவும்.

இடையில் நான் திரைப்படங்களை இயக்க ஆரம்பித்து பிரபலமடைந்து கொண்டு வருகின்ற நேரம். ஒருநாள் கோவை செழியன் அவர்கள் என்னை வந்து சந்தித்தார். M.G.R.ஐ வைத்து தாம் ஒரு படம் தயாரிக்கவிருப்பதாகவும் அதை நான் இயக்க வேண்டுமென்று எம்.ஜி.ஆர். விரும்புவதாகவும் சொன்னார். இது அல்வா சாப்பிடுகிற மாதிரி ஒரு செய்தி. ஆனால் எனக்குச் சற்று அதிர்ச்சியாக இருந்தது. என் தயக்கத்தைப் பார்த்து ஆச்சர்யப்பட்ட கோவை செழியன்... "என்ன ஸார்? தயங்கறீங்க! MGR படம்! என்ன கசக்குதா? உங்க சம்பளம் என்ன சொல்லுங்க! நீங்க என்ன சொன்னாலும் சரி. NO BARGAIN" என்றார்.

நான் சொன்னேன் :

"M.G.R. படம் இயக்க வேண்டுமென்றால் அதற்கு ஒரு தனி சாமர்த்தியம் வேண்டும். அது எனக்கில்லை... தயவுசெய்து என்னை மன்னித்து விடுங்கள்... ஆனால் ஒரு வேண்டுகோள். M.G.R. இடம் சென்று 'பாலசந்தர் முடியாது'ன்னு சொல்லிட்டாருன்னு மட்டும் சொல்லி வைக்காதீங்க... அவருக்கு 'தேதிகள்' ஒத்து வரவில்லை யென்று சொல்லி விடுங்கள்" என்று கோவை செழியன் அவர்களைச் சமாதானப்படுத்தி அனுப்பினேன்.

ஆனால் செழியன் 'கன்வின்ஸ்' ஆன மாதிரி தெரியவில்லை...

"சரியான பைத்தியக்காரனாக இருக்

கிறாயே! எம்.ஜி.ஆர். படத்தை யாராவது வேண்டாம் என்று சொல்வார்களா?" என்கிற மாதிரியே என்னைப் பார்த்து, புன்னகைத்து விட்டுச் சென்று விட்டார்.

அன்றைக்கு நான் செழியனிடம் என் சம்மதத்தைத் தெரிவித்திருந்தால், அது எனது திரையுலகப் பாதையையே வேறு விதமாக மாற்றியமைத்திருக்கக்கூடும். அதாவது பொருளாதார ரீதியாக ஒரு மிக உயர்ந்த நிலையை இந்த வாய்ப்பு எனக்கு அன்று அளித்திருக்கக்கூடும் என்பது உண்மைதான்.

ஆனாலும் 'பாலசந்தர்' என்கிற அந்த 'ENTITY', அந்தத் தனித்தன்மையைப் பேணிப் பாதுகாக்க வேண்டியதும், திரை அபிமானிகளிடம் நான் மெல்ல மெல்ல வளர்த்து வந்திருக்கிற அந்த 'IMAGE' ஐ காப்பாற்ற வேண்டிய தார்மீகப் பொறுப்பும் என்னுடையதாக இருந்தது.

M.G.R. என்கிற மாமனிதர் திரையுலக சாம்ராஜ்யத்தின் சக்ரவர்த்தியாகத் திகழ்ந்தவர் தான். அந்த சக்ரவர்த்தி என்கிற சிம்மாசனத்திலிருந்து அவர் அகற்றப்படவேயில்லை, அவரது மரணத்திற்குப் பின்பும்.

ஆனாலும் அன்றைக்கு எனக்குக் கிடைத்த வாய்ப்பை நான் பயன்படுத்திக் கொள்ள மறுத்து விட்டேன்.

SUBTRACT GRETA GARBO FROM ANY OF HER FILMS AND YOU ARE LEFT WITH NOTHING.

'கிரேடா கார்போ' என்கிற ஆங்கில நடிகை பற்றி, ஒரு பிரபல திரைப்பட இயக்குநர் இப்படிக் கூறினார். அதுவேதான் எனது நினைவுக்கு வந்தது. அதாவது அவர் நடிக்கும் படங்களின் சிறப்புகளுக்கு வேறு யாருமே காரணகர்த்தாவாக இருக்க முடிவதில்லையென்கிற ,பொருளில் சொல்லப்பட்டது.

I NEVER WANTED TO BE LEFT WITH NOTHING.

"வாய்ப்பு" என்பது இருமுறை வந்து உன் வீட்டுக் கதவுகளைத் தட்டுவதில்லை" என்று எனது நெருங்கிய நண்பர்கள் கடிந்து கொண்டனர்.

நான் சொன்னேன் :

"வாய்ப்பு' மட்டுமே வெற்றிக்கு ஆதாரமாகி விடாது; ஆனால் தன்னம்பிக்கை வெற்றிக்கு அடி கோலுகிறது. அது ஒரு சவால். இந்தச் சவால் எனக்குப் பிடித்திருக்கிறது."

எனது தன்னம்பிக்கை என்னைக் கைவிடவில்லை.

(இன்னும் வரும்)






# விரட்டும் விஷ வட்டம்!

போன வாரம் நான் சொன்ன சுலபமான வாழ்க்கை முறை மாற்றங்களால் மலச்சிக்கலை ஜெயிக்க முடியாதவர்களுக்கு மருந்து கொடுத்துத் தான் ஆகணும்.

- இஸஃப்கால் என்ற ஒரு வகை தாவரத் தவிடு. இது தண்ணீர் பட்டதுமே அதை உறிஞ்சிக் கொண்டு உப்பிக் கொள்ளும். இதைச் சாப்பிட்டால் குடலுக்குள் போய் உப்பிக் கொண்டு கூடுதல் அழுத்தத்தை உண்டாக்கும். கீரையும் வாழைத் தண்டும் மிதமாகச் செய்யும் காரியத்தை இது அதிக வீரியத்தோடு செய்யறதுன்னு சொல்லலாம்.
- அடுத்தது லிக்குவிட் பாரஃபின். இது வழுவழுப்பான திரவம். குடலின் 'mucous membrane' இல் - அதாவது மெலிதான உட்சுவர்ப் பகுதியில் இந்த திரவம் பூச்சு போல படிய, கழிவுப் பொருள் வெளியேற்றம் சுலபமாக்கப்படுகிறது. ஆனால், இதைத் தொடர்ந்து உபயோகிப்பதால் அபூர்வமாகச் சிலருக்கு 'பாரஃபினோமா' என்ற ஒரு வகை கட்டி வரக்கூடும்!
- லிக்குவிட் பாராஃபினுடன் வேறு சில ரசாயனப் பொருள்கள் கலந்த மருந்துகள் - laxatives - அடுத்தபடியாகக் கொடுக்கிறோம்.
- மேற்சொன்ன எதுவும் கை கொடுக்காவிட்டால் மருத்துவமனையில் தற்காலிகமாக அட்மிட் பண்ணி எனிமா கொடுத்தும் கைகளை உபயோகித்தும் மலத்தை வெளியேற்றுவதும் உண்டு.

இந்த அவஸ்தைகளெல்லாம் வேண்டாமே என்றுதான் போன வாரம் வருமுன் காப்பது என்ற முறையில் உணவுப் பழக்கங்களையும் வாழ்க்கை முறையையும் சீரானபடி அமைத்துக் கொள்ள யோசனைகள் சொன்னேன்.

ஒரு சோகம் என்னன்னு கேட்டீங்கன்னா, சில பேருக்கு பைல்ஸ், ஃபிஷர் ஃபிஸ்டுலா போன்ற நோய்கள் அவங்களையும் மீறி வந்துடறதால அவங்களுக்கு இந்தச் 'சிக்கல்' ரொம்ப சீரியஸாயிடுது. நார்மலாக தினமும் நிகழ வேண்டிய ஒரு காரியம் தாங்க முடியாத வேதனையையும் வலியையும் உண்டாக்கறதாலே, அந்தக் காரியத்தை நினைச்சாலே பயம் வருது. அதை ஒத்திப் போட ஆரம்பிக்கறாங்க. அதனால பிரச்னை இன்னும் தீவிரமாகிறது. இப்படி ஒரு விஷ வட்டத்துக்குள்ளே அவங்க சிக்கிக்கிடறாங்க.

பைல்ஸ் என்பது என்ன? ஆசனப் பகுதிக்குக் கொஞ்சம் மேலே முக்கியமான ரத்த நாளம் ஒண்ணு இருக்கு. அது மூன்றாகப் பிரிந்து, ஒரு கடிகாரத்தின் மூன்று மணி, ஏழு மணி, பதினோரு மணி நிலைகளில் கீழ்க் குடல் பகுதிக்கு ரத்தம் சப்ளை செய்யுது:

  

இந்த மூன்று பிரிவுகளில் ஏதேனும் ஒன்று 'மக்கர்' பண்ணும் போது அந்த இடத்தில் ரத்த நாளங்கள் கொத்தாக வீங்கிக் கொள்கின்றன. சில பேருக்கு, காலின் ஆடுசதைப் பகுதியில் varicose veins என்ற நோய் வந்து புடைத்துக் கொள்ளுமே, அது போல! இந்த வீங்கிய முடிச்சுகளைத் தள்ளிக் கொண்டு கழிவு வெளியேறுவதால் வலியும் ரத்தப்போக்கும் ஏற்படுகிறது. பைல்ஸ் இருப்பவர்களுக்கு வலி அவ்வளவாக இல்லாவிட்டாலும் ரத்தப் போக்கு பயப்படும்படி மிக அதிகமாக இருக்கும்.

நாளாவட்டத்தில் இந்த வீக்கம் கீழ்நோக்கி இறங்க ஆரம்பிக்கிறது. கடைசி நிலையாக உடலுக்குள்ளிருந்து வெளியே கூட வந்து விடுகிறது!

சிலருக்கு ஆசனப் பகுதியில் தசைகள் இயல்பாகவே சக்தி குன்றியிருக்கும். அதனால்

மலம் வெளியேறும் இடத்தில் வெடிப்புகள் உண்டாகும். இதைத்தான் ஃபிஷர் என்கிறோம். தொடர்ந்து மலச் சிக்கலால் அவதிப்படுபவர்களுக்கும் இது வரக்கூடும். ஃபிஷர் இருப்பவர்களுக்கும் ரத்தப் போக்கு இருக்கும் - ஆனால் ஒருசில துளிகளே ரத்தம் வெளிப்படும். வலியோ சகிக்க முடியாத அளவுக்கு இருக்கும்.

ஃபிஸ்டுலா என்றால் ஒரு ஆழமான, நீண்ட குழி. சில பேருக்கு இக்கட்டாக அந்தப் பகுதியில் கட்டி வந்து புரையோடிப் போய் அப்படியொரு குழியை ஏற்படுத்தி விடும். வேதனை சொல்லி முடியாது.

இந்தக் கோளாறுகளுள் ஏதேனும் ஒன்றின் அறிகுறி தென்பட்டாலும் டாக்டர் உதவியைக் கேட்கறது ரொம்ப முக்கியம். மேலும், மலச் சிக்கலும் வயிற்றுப்போக்கும் மாறி மாறி இருப்பதோ மலம் வெளியேறுவதில் வேறு அசாதாரண நிலைகள் தொடர்ந்து தென்படுவதோ கான்சரின் அறிகுறியாகவும் இருக்கக்கூடும். அதனால், நம்மில் முக்கால்வாசிப் பேர் கூச்சப்பட்டுக் கொண்டு, 'சூடு', 'சீத பேதி' என்று self-diagnosis பண்ணிக்கிட்டு பிரச்னையை வளர விட்டுடறோம்.

ஆரம்ப நிலையிலேயே டாக்டரிடம் போயிட்டா அவங்க தீர விசாரிச்சும் புராக்டோஸ்கோப் என்கிற கருவியை உள்ளே செலுத்திப் பார்த்தும் என்ன பிரச்னை இருக்குன்றதைத் தெளிவா கண்டுபிடிச்சுடுவாங்க. ஆனால் பெரும்பாலானவங்க முற்றிப் போன ஸ்டேஜ்லதான் எங்ககிட்டே வர்றாங்க - மருந்துகள் மூலமா குணப்படுத்த முடியாத அந்தக் கட்டத்துல நாங்க ஆபரேஷன் செய்யறதைத் தவிர வேறு வழி...? அதனாலேயே, 'பைல்ஸா? ஆபரேஷன் பண்ணாத்தான் போகும்' அப்படிங்கற மாதிரி ஒரு எண்ணம் நல்லா வேர் பிடிச்சுக் கிட்டிருக்கு.

ஒரு அகலமான பேசினில், 110 டிகிரி ஃபாரன்ஹீட் சூட்டில் வெந்நீர் எடுத்துக் கொண்டு, தினமும் காலை பத்து நிமிடங்கள் அதில் உட்காரலாம். இதை 'சிட்ஸ் பாத்' என்று சொல்லுவோம். இந்தக் 'குளியல்' பைல்ஸ் போன்ற பிரச்னைக்கு மட்டுமில்லாம வேற பல விஷயங்களுக்கும் உதவறதாக நம்பிக்கை இருக்கு. முக்கியமா காலை நேரத்துல கட்டாய 'ரிலாக்ஸேஷனா' அமையுது.

ஆனால் நீங்க வெந்நீருக்குள்ள உட்கார்ந்துக்கிட்டு, ஐயோ நேரமாயிடுச்சே, இன்னும் ஷேவ் பண்ணிக்கணும், குளிக்கணும், சட்டை அயர்ன் போடணும்னு 'டென்ஷன்' ஆனீங்கன்னா, அதுக்கு எந்த டாக்டர் உதவ முடியும்? சொல்லுங்க....!

- டாக்டர் பி. ஆர். சுப்ரமண்யம்





# அந்த இடத்தில் நீங்கள்... போட்டி முடிவு

**மணமகள் முடிவு :**

நேரே மாப்பிள்ளையிடம் போய், எங்கள் குடும்ப நிலையை எடுத்துக் கூறுவேன். மாப்பிள்ளை தமது தாய் தந்தையர் விருப்பப்படி ''பவுன்தான் வேண்டும்'' என்று கூறினால், என் பெற்றோரிடம் திரும்பி வந்து, ''இந்த மாப்பிள்ளையைப் பிடிக்கவில்லை'' என்று கூறி விடுவேன். வாழ்க்கை முழுவதும் தன்னையே அர்ப்பணிக்கும் ஒரு பெண்ணை விட இரண்டு பவுன்தான் முக்கியம் என்றால் அவர் கணவராகவா இருப்பார்? வியாபாரியாகத்தானே விளங்குவார்!

**மணமகன் முடிவு :**

இரண்டு சவரன் நகைக்காகப் பெண்ணை ஒதுக்காதீர்கள். இந்தப் பெண்தான் என் மனைவி. இவளைத் தவிர வேறு யாரையும் திருமணம் செய்து கொள்ள மாட்டேன். இனி பெண் பார்க்க எங்கும் வர மாட்டேன் என்று பெற்றோரிடம் கூறுவேன். மகன் பிரம்மச்சாரியாகவே வாழப் போவதை எந்தப் பெற்றோர்தான் விரும்புவார்கள்? எங்கள் திருமணம் நல்லபடியாக நடக்கும்.

மேற்சொன்ன விதமாகப் பலரும் எழுதியுள்ளனர். வார்த்தைகள் வித்தியாசப்பட்டாலும் அடிப்படைக் கருத்து இதே. எனவே இவ்வாறு எழுதிய ஆண்/பெண் வாசகர்களின் கூப்பன்களைப் பிரித்து எடுத்து தனித்தனியே குலுக்கலில் இருவர் தேர்ந்தெடுக்கப்பட்டனர். ரூ. 125/- பரிசு பெறும் இருவர் :

1. இரா. சரஸா, ''மாதவ இல்லம்'',
13, தெற்கு மாடத் தெரு,
கிருஷ்ணகிரி - 635 001.

2. வே. பார்த்தசாரதி, ஜே/25,
விடுதலை நகர், முதலியார்பேட்டை,
புதுவை - 4.

## மோட்டார் சைக்கிள் பரிசுத் திட்டம்!

**போட்டி - 2**

இந்த இதழின் 'நீங்கள் கேட்டவை' பக்கத்தில் பரிசுக்குரிய கேள்வியைத் தேர்ந்தெடுத்து விட்டு, கேள்வி கேட்டவர் யார் என்பதைச் சொல்லாமல் விட்டு விட்டார் தராசு. அதை நீங்கள் கண்டுபிடிக்க வேண்டுமாம்! இடம்பெற்றுள்ள கேள்விகளில் பரிசுக்குத் தகுதியான கேள்வி எது என்பதை ஊகித்து, கூப்பனில் நிரப்பி பத்திரமாக வைத்துக் கொள்ளுங்கள். உங்கள் தேர்வு, தராசின் தேர்வோடு ஒத்துப் போனால் இந்தப் போட்டியில் நீங்கள் வெற்றி பெற்றவராவீர்கள். 26 போட்டிகளில், அதிகப் போட்டிகளில் கலந்து கொண்டு, அதிக வெற்றி பெறுபவருக்குப் பரிசு - தெரியும்தானே? 26 வாரக் கூப்பன்களையும் மொத்தமாக அனுப்ப வேண்டியது அவசியம். ஆசிரியர் தீர்ப்பே இறுதி.

போட்டி - 2
பரிசுக்குரிய கேள்வி :

கேட்டவர் :

என் பெயர் :..............................
முகவரி :..............................
..............................
..............................



# செஸ் சிப்ஸ்!

'சாங்கி' - ஐதராபாத்திலிருந்து 40 கி.மீ. தூரத்தில் உள்ள சாங்கி குரூப்பின் தொழில் நகரம். கொஞ்ச நாள் முன்பு அகில உலக செஸ் சாம்பியன்ஷிப் (கால் சுற்று) பந்தயப் போட்டி இங்கு நடைபெற்றது. அதிலிருந்து சில சுவாரஸ்யத் துளிகள் :

இடறி விழுந்தால் பன்னாட்டு கிராண்ட் மாஸ்டர் மீதோ, அல்லது அயல்நாட்டு நடுவர், இந்திய செஸ் விற்பன்னர்கள் மீதோ முட்டிக் கொள்ள வேண்டிய நிலைமை!

மத்திய விவசாய அமைச்சர் பலராம் ஜாக்கர் ஒரு வாக்கியத்தில் திறந்து வைக்க, ஆட்டம் தொடங்குமுன் உலகப் புகழ்பெற்ற ஆனந்த் சங்கரின் நாட்டியக் குழு 'புத்தி-விஜய்' (அறிவின் வெற்றி) என்ற பாலே நிகழ்ச்சியை நிகழ்த்தினர்.

செஸ் போர்டில் 64 சதுரக் கட்டங்கள்; 16 வெள்ளை; 16 கருப்புக் காய்கள். இந்த எளிமையான விளையாட்டிற்கு எத்தனை பிரும்மாண்டமான ஏற்பாடு பாருங்கள் :

ஏ.ஸி. அரங்கம். ஒரே சமயம் 3 ஜோடி ஆடுவதற்கேற்ப 3 மேசைகள்; 3 ஜோடி நாற்காலிகள். மேசை மீது ஆட்டக்காரர்களின் நாட்டுக் கொடிகள். காய்கள் நகர்த்த ஒரு ஆட்டக்காரர் எடுத்துக் கொள்ளும் நேரத்தைக் கணிக்கும் விசை கடிகாரம். ஒரு காய் நகர்த்தியவுடன் ஆட்டக்காரர் தனது கடிகாரத்தை நிறுத்துகிறார். ஒரு காகிதத்தில், காய்கள் நகர்த்திய விவரம் குறித்துக் கொள்கிறார்.

சபையின் பேச்சு, ஆரவாரம், காமிரா கிளிக் சப்தம் கூட ஆட்டக்காரர்களின் சிந்தனையைக் கலைக்கக் கூடாது என்பதற்காக மேடைக்கும், சபைக்கும் இடையே கண்ணாடித் திரை.

விளையாடும் போது ஆட்டக்காரர்கள் ரிலாக்ஸ் செய்ய இடையே உலா, பக்கத்து மேசை ஆட்டத்தைப் பார்வையிடல், கொட்டாவி இத்யாதி.

சீட்டு மூலம் ஆட்டக்காரர் ஒருவர் தேர்வு. அவர் இரண்டு பெட்டிகளில் ஒன்றைத் திறந்து, தனக்குரிய காய் வெள்ளையா, கருப்பா எனத் தெரிந்து கொள்கிறார். வெள்ளை காய்க்கு முதலில் நகரும் உரிமை.

சாங்கி நிறுவனத்திற்கு பந்தயப் போட்டி ஸ்பான்சர் செய்ய செலவு எக்கச்சக்கம். உலக செஸ் பெடரேஷன் FIDEக்கு ரிஜிஸ்டிரேஷன் தொகை 21,000 ஸ்விஸ் ப்ராங்குகள். அகில இந்திய செஸ் பெடரேஷனுக்கு சந்தா ரூபாய் ஐந்து லட்சம். தவிர பன்னாட்டு கிராண்ட் மாஸ்டர்கள், உடன் வருபவர், நடுவர், வருணனையாளர்கள், விமானம், தங்கும் செலவு இன்னபிற. ஆட்டக்காரர்களுக்கு விசேஷ விடுதிகள், நீச்சல் குளம் கட்டப்பட்டன. விசேஷ எலக்ட்ரானிக் திரை அயர்லாந்து நிபுணர் மூலம்

ரூபாய் ஆறு லட்சம் செலவில் அமைக்கப்பட்டது. 30 டெலிவிஷன் திரைகள். மொத்தம் இரண்டு கோடி ரூபாய்.

விதிகள் பிரகாரம் ஒரு செஸ் போட்டி நடத்த FIDE ஸ்தாபனத்திற்குத் தர வேண்டிய குறைந்த ஏலத் தொகை 45,000 ஸ்விஸ் பிராங்குகள். சாங்கி, ஏலம் கேட்ட தொகை 75,000 ஸ்.பி. FIDE சரித்திரத்தில் இதுவே மிகப் பெரிய தொகை என்கிறார் அதன் தலைவர்.

ஜீனியஸ் காடா காம்ஸ்கி, தந்தை ருஸ்டமுடன் வந்திருந்தார். தந்தைதான் சமையல். 20 கிலோ மாமிசம் வைக்க பெரிய ஃபிரிஜ் கேட்டார். தினம் ஹைதராபாத்தி விருந்து புதிதாக மாமிசம் வரவழைத்துக் கொடுக்க முடியும் என சாங்கி நிர்வாகம் கூறியும் மறுத்து விட்டார்.

செஸ் ஒரு விளையாட்டில்தான், ஆட்டத்திடையே பசி தீர முழு உணவு சாப்பிட்டுக் கொள்ளலாம். பிரிஜ்ஜில் முந்திரிப் பருப்பு, வெண்ணெய், ரொட்டி, கனிமநீர், சூப்பு... இத்யாதி ரெடி. உணவு வழங்க, தேநீர் தயாரிக்க ஒரு சர்வர். ஆனால் சாங்கியில் ஆடிய அகில உலக ஆட்டக்காரர்கள் விளையாட்டிடையே சோர்வு நீங்க கறுப்பு காப்பி, ஸூப் மட்டும்தான் சாப்பிட்டார்கள். உணவு அதிகமானால் கண்கள் சொக்குமோ என்ற பயம்!

கிராண்ட் மாஸ்டர் போரிஸ் கெல்ப் லாண்ட் தமது காதலி ஜியோ டிரான் (ZIO TRAN) என்ற பிலிப்பைன்ஸ் அழகியுடன் விஜயம். சபையின் முதல் வரிசையில் அமர்ந்து டிரான் எழுப்பும் காதல் அலைகள் செஸ் ஆடும் போரிஸுக்கு உற்சாகம் தந்தன.

எலக்டிரானிக் செஸ் போர்டு அமைக்க கெவின் ஓ கோனல்லும் அவரது டீன்ஏஜ் புதல்வனும் வந்திருந்தார்கள். ராடர் ஒன்று செஸ் போர்ட் இயக்கத்தை கம்ப்யூட்டருக்கு சிக்னல் செய்கிறது. இறுதியில் பூதாகாரமான திரைக்கு ஒளிபரப்பாகும். அதையே தூர்தர்ஷன்காரர்கள் பயன்படுத்துகிறார்கள். விமரிசகர்களும், பத்திரிகையாளர்களும் தங்கள் கடமையைச் செய்ய இதுவே அடிப்படை. கடைசியாக நகர்ந்த காய் திரையில் விட்டு விட்டுப் பளிச்சிடும்.

கிராண்ட் மாஸ்டர்களுக்கு ஆட்ட நாட்களில் அறிவுபூர்வமாக உதவ இரண்டாவது நபர் உண்டு. அவர் எதிராளியின் பலவீனங்கள், தாக்குதல்கள் உணர்ந்து, எந்த உத்திகளைக் கையாள வேண்டும் என்பதை ஆலோசனை சொல்லக்கூடிய வல்லுனர். ஆடும் நேரத்தில் இவர் அருகே போக முடியாது.

நடுவர் என்ற ARBITER ஆட்டத்தைக் கவனித்து வருவார். பரீட்சை எழுதும் மாணவரிடையே உலாவரும் ஆசிரியர் மாதிரி தோன்றுவார்.

ஸாங்கி கால் சுற்று செஸ் ஆட்டத்தில் பரிசுகள் விவரம் :

வெற்றி பெற்றவர் : ரூ. 10.3. லட்சம்

ரன்னர் : ரூ. 6.3 லட்சம்

(இது 5:3 என்ற விகிதம் பங்கீடு)

ஆனால் ஆனந்த் - காம்ஸ்கி சம பாயின்டுகள் எடுத்து நீடிப்பு ஆட்டத்தில் காம்ஸ்கி ஜெயித்ததால், இருவருக்கும் சமபங்கீடு. ஆனந்த் பங்கு ரூ 8.3 லட்சம்.

அரைச் சுற்று போட்டிகளும் 1995ன் முற்பகுதியில் சாங்கியிலேயே நடைபெற இருக்கிறது. அதற்காக உலக செஸ் பெடரேஷனுக்கு (FIDE) சாங்கி தரும் ஏலத் தொகை ஐந்து லட்சம் டாலர்கள். இதுவரை யாரும் தொடாத தொகை என FIDE இன் தலைவர் கூறுகிறார்.

பதிமூன்று நாட்கள் சாங்கியில் நடைபெற்ற உலக செஸ் ஆட்டத்தில் ஆனந்த் வெற்றி பெறுவார் என்று இதயத் துடிப்புடன் காத்திருந்தோருக்கு ஏமாற்றமே ஏற்பட்டது என்றாலும், இந்திய மண்ணில் நடைபெற்ற முதல் பந்தயம், பல இளைஞர்களுக்கு செஸ் ஆட்டத்தில் ஆர்வம் ஏற்படுத்தியிருக்கிறது.

- சுபஸ்ரீ

படம் - நன்றி : நியூஸ் டைம்

---

பீகாரில் பணிபுரியும் சுமார் 40 ஆயிரம் சமஸ்கிருத ஆசிரியர்கள் கடந்த 14 வருடங்களாக சம்பளமே வாங்கவில்லை! இது விஷயமாக இவர்கள் மாநில அரசிடம் முறையிட்டாயிற்று, பலமுறை ஒப்பந்தம் கையெழுத்தாகிவிட்டது. அதுவும் பயன்படாமல் மனிதவள மேம்பாட்டு அமைச்சரையும் பார்த்தாயிற்று, பிரதமரையும் பார்த்தாயிற்று! இவர்களுக்கு இன்னும் விமோசனம் ஏற்படவில்லை!

- சம்பத்குமாரி

# சகல சம்பத்துக்களையும் தரும் ஸ்ரீலக்ஷ்மி குபேர சக்கரம்

இணையிலா நலங்காண சில இணக்கனங்கள் இருக்கின்றன. தேவ ரகஸியம் என்ற தேன் ஊற்றுக்களை தேவர்கள் மறைத்து மடியிலேயே கட்டிக் கொண்டனர் - ஆனால் அவற்றின் ஆற்றல் மிக்க சக்திகள் - சில ஆன்றோர் வாயிலாக நமக்குக் கிடைத்திருப்பது - நானிலம் செய்த புண்ணியம்தான் - அதில் தலையாய - அட்சரம் இது. இதனை ஆராதனை செய்ய ஆரம்பித்துவிட்டால் ஆண்டியும் அரசனாவான் - இது வெறும் வார்த்தைக்காக வடித்த வாசகமன்று - தேவ ரகஸிய வழியாக வந்த தேவாமிர்தம் - 1. எத்தனை கடனாளியாக இதயம் நொந்து போயிருந்தாலும், அதை அடைக்கும் ஆற்றல் பெற - அரசனென வாழ, 2. வயது கடந்து வாலிபம் தேய்ந்து விவாகமற்று வேதனையுற்று நிற்போர் - விரைவில் விவாக விழாக் காண, 3. விவாகமாகி பல்லாண்டு கடந்தும் பாலகனில்லாது பரிதவிப்போர் - பிள்ளைப் பேற்றினைப் பெற, 4. வீடு கட்டும் விருப்பமிருந்தும் அதற்கான விடிவு காலமின்றி வேதனையுண்டோர், பெரிய வீடு கட்டிக் குடியேறும் பெருமைக்கான செல்வ வளம் பெற, 5. பிறரால் பில்லி சூன்யம் என்ற பிசாக தோஷ பீடிதங்களால் - வறுமையிலும் - வருத்தத்திலும் வாடி, வதங்கிடுவோர் - அவற்றை அகற்றிவிட்டு ஆனந்த வாழ்வு கொள்ள, 6. கணவன் மனைவி உறவில் கசப்புக் கண்டு, கைப்பிடித்தாளை விட்டுவிட்டு வேற்று மங்கையுறவில் மகிழ்ச்சி காணுவோர் - மனம் திருந்தி மாலையிட்ட மனைவியை வந்தடைந்து வாழ்வு முழுவதும் வாடாமல் அவளைக் காக்கும் நிலை அடைய, 7. பல்லாண்டு காலமாய்த் தொழில் செய்தும் ஒரு காசும் மிஞ்சாத கஷ்ட நிலையிலேயே காலத்தைக் கடத்தும் கண்ணீர் விடுவோர் - கையில் குபேர செல்வம் குவிந்து வரும் நிலை அடைய, 8. பல காலமாய் பணியாற்றியும் - பதவி உயர்வு காணாமல் - பதைபதைத்து நிற்போர் - பதவி உயர்வு பெற்றிடவும் ஊதிய நிறைவு அடைந்திடவும், 9. வியாதி வழி கொடுமைகளால் வாழ்வெல்லாம் துயருற்றுத் தவிப்போர் - எந்த வியாதியாயிருந்தாலும் - அதனின்று விடுதலை பெற்று பூரண ஆரோக்கியமும் தீர்க்க ஆயுளும் பெற்றிடவும், நிச்சயமாக ஒரு குபேரனென கோடி செல்வம் சேர்த்துக் குவலயத்தில் ஒரு கோடீஸ்வரனாக வாழவும் - வழி செய்யும் வியப்பான சக்கரம் இது. வீடு தேடி இது வந்துவிடில் - விதி வழியாக துயரம் நீங்கி - ஸ்ரீ லக்ஷ்மி கடாக்ஷம் பூரணமாய் ஏற்பட போகின்றது என்றுதான் பொருள். ஆகவே அரிய இந்த 6 அங்குல அகல நீள சக்கரத்தை - 5 லக்ஷம் உருவேற்றி அதிசக்தியூட்டப்பட்ட அழகுமிக்க சக்கரத்தைப் பெற்றிட உரிய காலம், அரிய வேளை வேண்டுவோர் 18.10.1994 தேதிக்குள் - தெளிவான முகவரியுடன் மனுச் செய்து கொள்ளுங்கள் - வாங்கிடும் வழிமுறைகளை எழுதுகின்றோம். வாழ்வாங்கு வாழ்வீர்கள். வளமிகு செல்வமதைப் பெறுவீர்கள் - உறுதி.




பிரபல ஜோதிடர் ஜோதிட ஆசான்,
ஸ்ரீமத் ஜெயவீர தேவா, யோகி,
ராஜயோகப் பயிற்சியாளர்,
பிளாட் எண் : 204, அண்ணா நகர்,
மதுரை - 625 020, தமிழ்நாடு,
போன் : 43412, 46634.



• பெயர் சூட்டல் கலாசாரம்!

● ரகுஸ்ரீ, தாண்டாம்பாளையம்.

? மருத்துவ, பொறியியற் கல்லூரிகளில் ஒதுக்கிடு செய்யப்படும் இலவச இடம் தொடர்பாக ஆதி திராவிடப் பெண் சசிகலாவிற்கு அநீதி இழைக்கப்பட்டது எதைக் காட்டுகிறது?

! ஆதி திராவிடர் நலத்தின்மேல் இந்த ஆதிபராசக்தி அரசுக்கு இருக்கும் அக்கறை முழுமையாகச் செயல்படவில்லை என்பதைத்தான்!

● எஸ். பாலசந்தர், மாங்குடி.

? ஜெயின் கட்-அவுட் கலாசாரம் குறைந்துபோய், பெயர் சூட்டும் கலாசாரம் வளர்ந்துள்ளது பற்றி...?

! பெயர் சூட்டும் கலாசாரம் வளர்ந்து வருவது சரி; கட்-அவுட் எங்கே குறைந்தது?

● ஆர். சுப்பராவ், திருக்கோவிலூர்.

? இந்தியாவில் வர்த்தகம் புரியப் புகுந்திட்ட கிழக்கு இந்தியக் கம்பெனி நாளடைவில் நாட்டையே அடிமையாக்கிவிட்டது! இன்று அயல்

# கட்-அவுட் கலாசாரம் குறைந்து பெயர் சூட்டும் கலாசாரம் அதிகரித்துள்ளதே?

நாட்டுத் தொழில் - வர்த்தக நிறுவனங்கள் பெரும் பட்டாளமாகவே இங்கு புகுகின்றன. பழைய வரலாறு திரும்பவும் நிகழுமா?

! அன்றைய நிலையையும் இன்றைய நிலையையும் ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. ஆனாலும் குளிர் பானங்கள் போன்ற தேவையற்ற துறைகளிலெல்லாம் அயல்நாட்டவர் புக அனுமதிப்பதில் அர்த்தமில்லை என்றே தோன்றுகிறது. இரண்டாவது, மக்கள் ரொம்ப எச்சரிக்கையோடு கண்காணிக்காவிட்டால் நமது அரசியல் பெருந்தலைகளின் ஸ்விஸ் வங்கிக் கணக்குகள் வீக்கமடைவது உறுதி.

● ஆர். சங்கர், நெய்தவாசல்.

? தமிழர்களுக்கு ஹிந்தி மொழி அவசியம்தானா?

! வர்த்தகம் - உத்தியோக ரீதியில் அவசியம் என்று நினைப்பவர் படிக்க வசதி வேண்டும்; தேவையில்லை என்று நினைப்பவர் மீது திணிக்கப்படக் கூடாது. ஹிந்திக்கு மற்ற இந்திய மொழிகளுக்கு மேற்பட்ட ஒரு தனி அந்தஸ்து தரப்படக் கூடாது. இதுதான் கோரிக்கை. தர்ம நியாயமும் இதுவே.

● சூர்ய நிலா, சேலம்.

? சன் டீ. வி. யில் உங்களுக்குப் பிடித்த நிகழ்ச்சி?

! டெலிபோனில் நீங்கள் கேட்ட பாடலைக் கேட்டு ஒலி/ஒளிபரப்பும் அந்த நிகழ்ச்சியை விட, அந்த நிகழ்ச்சி அறிவிப்பாளரின் குழல்... வாரி குரல், அப்புறம் அந்த... அந்த... ஈர்ப்புச் சக்தி என்று சொல்வோமா?

● முத்ஸ், நாரேந்தல்.

? அரசு அதிகாரிகளில் சூப்பர் ஸ்டார் யார் யார்?

! யார், யாரா? ஒரே யார்தான்! அதான் அந்த மூன்றெழுத்து சிம்ம சொப்பனம்!

● பூங்கோதை குப்புசாமி, சென்னை.

? கடவுளுக்குக் காணிக்கை செலுத்தி காலில் விழுவதற்கும், முதல்வருக்குக் காணிக்கை செலுத்தி காலில் விழுவதற்கும் என்ன வித்தியாசம்?

! முன்னது சரணாகதி தத்துவம்; பின்னது முதுகெலும்பற்ற அடிமைத்தனம்.

● லீலா இராம், தக்கலை.

? விஜயபாஸ்கர ரெட்டி பிரச்னைக்குரியவராகிருக்கிறாரே?



• சூப்பர் ஸ்டார்!



• மதிப்பில் உயர்கிறார்!

! கட்சிக்குள் கருத்து வேறுபாடு இருக்கலாம். அவை கட்சிக் கூட்டங்களில் பேசி அலசப்பட்டு ஒருமித்த கருத்து உருவாக வேண்டுமே தவிர, பொதுக் கூட்டத்தில், அதுவும் பிரதமர் முன்னிலையில் அநாகரிகமாக நடந்து கொள்ளத் தூண்டிவிடக் கூடாது. இதனால் தனி நபருக்கு ஏற்படும் பாதிப்பைவிட கட்சிக்கே பாதிப்பு அதிகம். இவ்விஷயத்தில் உறுதியாக இருக்கும் ஆந்திர முதல்வர் என் மதிப்பில் உயர்கிறார்.

● **கே. சோமசேகர், காவேரிப்பட்டணம்.**

*? யாழ்ப்பாணம் மீதிருந்த பொருளாதாரத் தடையை நீக்கியது நல்ல அறிகுறிதானே?*

! பேச்சு வார்த்தைகளுக்குப் பூர்வாங்கப் பணிகளும் நடக்கின்றன. வரவேற்கலாம். ஆனால் சந்திரிகாவுக்குப் புலிகள் விஷயத்தில் எச்சரிக்கையும் தேவை. தங்கள் நிலையைப் பலப்படுத்திக் கொள்ள அவசியம் ஏற்பட்ட போதெல்லாம் யுத்த நிறுத்தம், பேச்சு வார்த்தை என்று அவர்கள் திரை போட்டுக் கொண்டதுண்டு என்பது சரித்திரம்.

● **வாசுதேவன், பம்பாய்.**

*? இஞ்சி டீ குடித்து மகிழ்ந்ததுண்டா?*

! இலேசாக தக்கு தட்டிப் போட்டால் சுவை மேலும் கூடும்.

● **என். கே. ஈசுவரி, பெங்களூர்.**

*? முன்பெல்லாம் அரசு லட்சம் லட்சமாகத்தான் திட்டங்களை அறிவித்தது. தற்போது கோடி கோடியாக அல்லவா அறிவிக்கிறது?*

! ரொம்ப நாளைக்கு முன்னால் 'லட்சுமிகாந்தன்' என்று ஒரு நாடகம். அதிலே அவனும் நண்பனும் ஒரு வீட்டை வாடகைக்கு எடுப்பார்கள். 'வாடகை எவ்வளவு?' என்று லட்சுமிகாந்தன் கேட்க, 'ஆயிரம் ரூபாய்' என்று நண்பன் பதில் கூறுவான். 'ஐயோ, அத்தனையா!' என்று லட்சுமிகாந்தன் திகைக்க, 'நாம என்ன கொடுக்கவா போறோம்?' என்பான் நண்பன், சிரித்துக் கொண்டே.

□ ரூ. 25 பரிசு பெறுபவர் :

**?**

● **ஆரூர் அரசு, பவித்திரமாணிக்கம்.**

*? பொதுவாகவே ஆளும் கட்சிக்கு எதிராகவே பத்திரிகைகள் செயல்படுவது ஏன்?*

! ஆட்சி நடக்கும் விதத்தைத் தான் பத்திரிகைகள் விமர்சிக்க முடியும். எதிர்க்கட்சிகள் நடத்தும் போராட்டங்களில் தவறு இருந்தால் எடுத்துக்காட்டலாம்; எனினும் அவை அடிக்கடி நடப்பவை அல்ல. இதனால் ஆளும் கட்சிக்கு எதிராகப் பத்திரிகைகள் செயல்படுவது போல் தோன்றுகிறது. இன்னும் சிலர் ஆளும் கட்சியை விமர்சிப்பதாலேயே அப்பத்திரிகையை 'எதிர்க் கட்சிப் பத்திரிகை' என்றும் முத்திரை குத்துவார்கள்! இவை தவறான அணுகுமுறைகள். கட்சிப் பத்திரிகைகள் தவிர மற்றவை, என்ன எழுதுகின்றன என்று பார்க்க வேண்டுமே தவிர யாரை எதிர்த்து என்றல்ல.

● **கே. ஆர். உபேந்திரன், தஞ்சாவூர்.**

*? மகாநாடு, கூட்டம், ஊர்வலம் மூலமெல்லாம் தமிழை வளர்க்க முடியுமா?*

! நமது தாய்மொழிப் பற்றை உணர்த்தலாம்; ஆனால் வளர்க்க முடியாது. வளர ஒரே வழி தயக்கமின்றி பிறமொழிச் சொற்களை ஏற்று தமிழாக்கிக் கொள்வது தான். ஆங்கிலத்தை யாரும் வளர்க்கவில்லை. பிற மொழிச் சொற்களை ஏற்று ஏற்றுத் தானே வளர்ந்து வளமுற்றது. இன்று உலக மொழியாகத் திகழ்கிறது. மேலும் வளர்கிறது.

● **தி. சி. ஆனந்தகுமார், திருவெண்ணெய்நல்லூர்.**

*? இந்திய அணி தொடரை வெல்லுமா?*

! ஸ்ரீலங்காவிடம் அடைந்த முதல் தோல்வி, அப்படி ஒரு ஆசையை வளர்த்துக் கொள்ள இடம் தரவில்லையே!

● **இரா. சம்பத்குமார், இராசிபுரம்.**

*? அயோடின் கலக்காத உப்பு விற்கத் தடையாமே?*

! நமது தைராய்ட் சுரப்பி நன்கு இயங்க அயோடின் சத்து அவசியம். இது நமது நீரிலும் நிலத்திலும் குறைவாக இருப்பதால் உணவில் கிடைப்பதில்லை. எனவே உப்பில் சேர்க்குமாறு அரசு உத்தரவிடுகிறது. அது போலவே ஃப்ளூரைட் பற்களுக்குப் பாதுகாப்பு. ஆனால் இவை அளவுக்கு அதிகமானாலும் கெடுதல்தான்.

• எச்சரிக்கை தேவை!




♦ "தாமரை" படத்தை இயக்கியவர் கே. ராஜலக்ஷ்மி என்று உள்ளது. அது தவறு. அப் படத்தை இயக்கியவர் கே. ராஜசிற்பி.
சாலிகிராமம், தி. கண்ணன்.

♦ குரு வாரம். ஏகாதசி திருநாள். திருவாதிரை நட்சத்திரம் கூடிய சுபநாள். எம்பெருமானுக்கு உகந்த நாள். இவ்வினிய நன்னாளில் 'சக்கரவர்த்தித் திருமகன்' மங்களகரமாக முடிவு பெற்றுள்ளது. திரும்பக் கிடைக்குமா இவ்வரிய பொக்கிஷம் என ஏங்கித் தவித்த உள்ளத்துக்கு 92 வாரங்களாக வந்து மகிழ்வித்து விட்டது. காலங்கள் மாறலாம், ஆனால் இதிகாசங்களின் சுவை மாறுவதில்லை என்பதற்கு இந்த தெய்வீகத் தொடரே உதாரணம்.
சென்னை - 39, மஞ்சுளா பாய்.

♦ கொத்துக் கொத்தாய் திராட்சையைப் பார்க்கும் போது வாயில் நீர் சுரக்கிறது. கிடைக்கின்ற வருமானத்தைப் படிக்கும் போது மனம் திராட்சைப் பயிர் செய்யத் துடிக்கிறது. விவசாயிகளின் நலம் கருதி இச்செய்தியை வெளியிட்ட கல்கியை மனம் பாராட்டத் தூண்டுகிறது.
லால்குடி, எம். இராஜேந்திரன்.

♦ தலையங்கம் கண்டேன். சமாதானம் தேவைதான். ஆனால் பாகிஸ்தானுடனும் தேவையா? நவாஸ் செரீப் சமீபத்தில் சொல்லியிருப்பதையெல்லாம் கேட்டபின்னுமா? நெருடுகிறதே!
திருவெண்ணெய்நல்லூர், எஸ். மதியழகன்.

♦ போரிட்டு அழிவதை இந்தியா ஒருபோதும் விரும்பியதில்லை. அமைதியை நிலைநாட்டவே விரும்புகிறது என்பதைப் பாகிஸ்தானுக்குப் புரியவைக்க வேண்டியதுதான் இப்போதைய முதல் பணி.
திருவெண்ணெய்நல்லூர், தி. சி. ஆனந்தகுமார்.

♦ நடந்து வருவாங்கோ! சைக்கிள்ளே வருவாங்கோ! பஸ்ஸிலே வருவாங்கோ! டூ வீலர்லே வருவாங்கோ! ஆனால் யானை மேலே வந்து படிப்பாங்கோன்றது புதுசுங்கோ! எப்படியோ முழுக் கல்வி அறிவு கிடைச்சா சரிங்கோ.
தூத்துக்குடி, சிவராமசுப்பிரமணியன்.

♦ வெற்று ஆர்ப்பாட்டமோ என்றெண்ணியிருந்த அறிவொளி இயக்கம் இன்று கல்வியறிவு இல்லாத மக்களின் உயிர்நாடியாக இருக்கிறது என்பதை அறியும் போது பிரமிப்பாகத்தானிருக்கிறது.
வீரக்கவுண்டனூர், ஸ்ரீவஹிதாமேரி.

♦ 'காப்பியடிக்காத ஜோக்ஸ்' தந்து சிரிக்க வைத்த ரகோத்தமனுக்குப் பாராட்டுக்கள். (ஒரு கப் காப்பி தர ஆசைதான். ஆனால்...)
கும்பகோணம், கே. என். பாலகிருஷ்ணன்.

♦ 'பட்டம் சூட்டுங்கள்' போட்டிக்கு, நம் வாசகர்கள், 'நம்மவர்களுக்குச் சூட்டியிருந்த பட்டப் பெயர்களைப் படித்துப் புல்லரித்துப் போனேன்!
கச்சனம், ஆர். திருமலை.

♦ 'சொர்க்கத்தில் முடிவானது' கதை மிக அருமை. பெரும்பாலான குடும்பங்களில் முரண்பட்ட குணங்களுடன் நிர்ப்பந்தமான சூழ்நிலையில் வாழ்வதை எங்கும் காண்கிறோம். இவர்களுக்கென்று இலவச ஆலோசனைக் குழுக்களும் கருத்தரங்குகளும் நடத்தப்படலாமோ என்று கூடத் தோன்றுகிறது.
கோவை, தி. ரங்கசாமி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

## வீட்டின் அழகு கதவில் தெரியும்

விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்ட

# மாயூரம் டிம்பர்

## கதவுகள்



அழகானவை,

உறுதியானவை

நீடித்து உழைப்பவை

காரணம்?

(1) தேர்ந்தெடுக்கப்பட்ட உயர்தர மரம் நவீன ஆலைகளில் ஈரப்பதம் 80%லிருந்து 14% ஆக குறைக்கப்படுகின்றது. இது மரம் வளைந்து, முறுக்காமல் தடுக்கிறது.

(2) மரத்திற்கு இராசயன கலவை பாதுகாப்பு அளிப்பதால் கரையான் அரிப்பதை தடுக்கிறது.

(3) தச்சு வேலை இயந்திரத்தில் செய்யப்படுவதால் கதவுகள் நேர்த்தியாக அமைகின்றன.

MADE TO ORDER BY:

# MAYAVARAM TIMBER DEPOT

No. 4, Post Office Road, Mayiladuthurai, Quaid-e-Milleth District, Phone: 23216

# MAYURAM TIMBER TRADING COMPANY

H.O. 83, G.S.T. Road, Tambaram – 600 045. Ph 2368297

# உங்கள் மழலைச் செல்வம் அவனது மென்மையான மிருதுவான உலகம்.

REGISTERED NO M 4392
Registered as Newspaper in Srilanka




லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.

## அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல் திட உணவும் அவனைப் போலவே மிருதுவாக இருக்கட்டும்.

உங்கள் குழந்தைக்கு இப்பொழுது 4 மாதங்களாகிறது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.

ஆம், நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.

பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சக்திகளும் கிடைக்கின்றன.

உங்கள் செல்வ மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம் காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.

**நெஸ்டம்**

எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.



இலவசம்
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள், போஸ்ட் பேக் 25,
புதுதில்லி-110016

முக்கிய அறிவிப்பு : உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதில் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுக்க